

தமிழகத்தின் வெண்திரை, காதல், மோதல், இசைபட வாழ்தல், அம்மா, அக்கா, தங்கை, ஆயா சென்டிமெண்டுகளோடு சிரஞ்சீவியாக பரிமளித்து வருகிற நிலையில், கொஞ்சம் தைரியமாக முயற்சி செய்யப்பட்டிருக்கும் திகில் படம் 'விட்னஸ்'.

ஒரு கொலையாளி கொல்வது மேல்தட்டு விலை மாதர்களை மட்டுமே. ஒவ்வொரு கொலையும் சுத்தமாய், அக்மார்க் முத்திரையோடு செய்யப்படுகிறது. போலீஸ் விரல் சூப்பிக் கொண்டிருக்கிறது.

சந்தேகங்கள், ஊகங்கள், தேடுதல் என்று சம்பவங்கள் தொடர்கின்றன. ஒரு கொலையில், விட்னஸ் ஒன்று ஏற்பட்டு விடுகிறது; குழந்தை கொலையைப் பார்த்து விடுகிறது. அப்புறமென்ன, கொலையாளி பிடிபட, முதுகுத்தண்டில் ஜில்லென்ற உணர்வோடு அனைவரும் எழுந்திருக்கிறோம்.

இந்தப் படங்களில், திகிலை உண்டாக்குவது முக்கியம். அதிகப் பின்னணி இசையில்லாமல், வெறும் மௌனத்தை மட்டுமே பயத்திற்கான விஷயமாக வைத்துக் கொண்டு படம் எடுத்திருக்கிறார்கள்.

சீட் நுனியில் தங்க வைக்க ஒவ்வொரு காட்சியும் சரியாக உருவாக்கப்பட்டுள்ளது. ஆனாலும் சில தொய்வுகள். திரும்பத் திரும்ப சில காட்சிகள் வருகிற மாதிரி இருக்கிறது.

கௌதமி, ரகுவரன், நிழல்கள் ரவி என்று ஒரு நட்சத்திரப் பட்டாளமே உண்டு. இரண்டு மூன்று பாடல்களும் உண்டு. மனத்தில் நிற்கவில்லை.

இருப்பினும் புது முயற்சி செய்திருக்கும் டைரக்டருக்கு வாழ்த்துக்கள். அடுத்த முறை உங்கள் திரைக்கதையை இன்னும் பட்டை தீட்டிக் கொள்ளுங்கள். இப்போதைக்கு திகில் ப்ரியர்களை திருப்திப்படுத்தியதற்கு ஒரு மீடியம் சைஸ் தேங்க்ஸ்!

\- துளசி

# விட்னஸ்

# கந்தப்பிள்ளை கருவாடு வாங்கிய கதை!

## மாறாத சுவை!

திருச்சி பாலக்கரை அருகே பிருமானந்தா கூல்டிரிங்ஸ் கடை உள்ளது. இங்கு போடப்படும் சர்பத், நகரில் பிரசித்தி. கோடை காலத்தில் இங்கு சர்பத் அருந்த டோக்கன் வாங்கி அரைமணி நேரம் காத்திருந்துதான் இளைப்பாற வேண்டும். சர்பத் நீர் கலக்க தனியாகக் குழாய் போட்டுள்ளனர். ஐஸ்போடுபவர் கையில் கிளவுஸ் போட்டுக் கொண்டுதான் வேலை பார்ப்பார். நாம் எந்த நேரத்தில் போய்க் குடித்தாலும் சுவை ஒரேமாதிரிதான் இருக்கும். இதில் சிறப்பு அம்சம் என்னவென்றால் நமக்கு சர்பத் தயாரித்துத் தருபவர் கடை உரிமையாளர் மட்டுமே. இந்நாள் வரைக்கும் இதற்கு இணையாக ஒருகடையும் போட்டி போட முடியவில்லை.

– விருதை ராஜப்பிரியன், திருச்சி – 8.

## விளக்கைக் கவிழ்த்தாலும்...

அரசுடைமையாக்கப்பட்ட வங்கிகளில் உருப்படியாக வேலை செய்பவர்களைப் பார்ப்பதே கடினம். அவ்வாறு வேலைகளையும் பார்த்து, இதற்கிடையே தினமும் புதுப்புது பொன்மொழிகளையும் எழுதி, வாடிக்கையாளர்களைக் கவர்ந்து வருவது திருச்சி சிந்தாமணியில் அமைந்துள்ள இந்தியன் ஓவர்சீஸ் வங்கி. நான் சென்றபோது கண்ணில் பட்ட அன்றைய வாசகம்: ''விளக்கைத் தலைகீழாகக் கவிழ்த்தாலும் ஒருபோதும் அதன் ஜ்வாலை தலைகீழாக எரிவதில்லை!''

ஆங்கரை ஆனந். திருச்சி – 2

## கருவாட்டுக் கதை!

''கந்தப் பிள்ளை கருவாடு வாங்கிய கதை'' தெரியுமா உங்களுக்கு? இதென்ன புதுக் கதை என்கிறீர்களா? ஏதாவது சொல்லிவிட்டு மாட்டிக் கொள்ளும்போது எங்கள் வீடுகளில் சொல்லப்படுவது.

குளித்தலை பஸ்நிலையத்தில் வெளியூர் செல்ல கருவாட்டுக்கூடையுடன் வியாபாரி ஒருவர் பஸ்ஸுக்குக் காத்திருந்தார். அப்போது அங்கு வந்த கந்தப் பிள்ளை (எங்கள் கிராமத்து உறவினர்) கருவாடு விலை பற்றி விசாரிக்கவும், அவரது செம்மண் புழுதி படிந்த வேட்டியைக் கண்டு மட்டமாக நினைத்த வியாபாரி, ''கூடையோட வாங்கிக்கிறியா? இருநூறு ரூபாதான்'' என்றார்.

''அவ்வளவையும் வாங்கி என்னப்பா செய்வேன்?'' என்றார் தணிந்த குரலில்.

''இல்லேனா மட்டும் வாங்கிடுவியா? வாங்கி உன் உறவுமுறைக்குத்தான் கொடேன்!'' என்று உரத்த குரலில் நையாண்டியாகப் பேசவும் கூட்டம் சேர்ந்து விட்டது. உடனே அவர் தமது அழுக்கு வேட்டியில் சுற்றி வைத்திருந்த மூவாயிரம் ரூபாயிலிருந்து இருநூறை எடுத்து நீட்டினார்.

வியாபாரிக்கு அதிர்ச்சி! உண்மையில் கருவாடு ஐநூறு ரூபாய் பெறும். வியாபாரி பேச்சை மாற்றினார். கூட்டம் விடவில்லை. வியாபாரியை மிரட்டி, கருவாட்டை வாங்கிக் கொடுத்து விட்டது. அப்புறமென்ன? அடுத்த நாள் உறவினர் வீடுகளில் எல்லாம் கருவாட்டுக் குழம்புதான்!

– வி. பாலசரவணன், திருச்சி – 3.

## திருச்சி வானொலி நிலையமா, கொக்கா?

மின் தடைக்குப் பேர் போனது திருச்சிராப்பள்ளி வானொலி நிலையம். ஏதாவது முக்கிய நிகழ்ச்சிக்காகவோ, அல்லது செய்திகளை கேட்பதற்காகவோ, திருச்சி (ஒன்று) நிலையத்திற்கு ரேடியோவைத் திருப்பினால் நிலையமே அம்பேல். இங்கிருந்து ஒலிபரப்பாகும் செய்திகளை வர்த்தக ஒலிபரப்பில் அஞ்சல் செய்வார்கள்! செய்தி முடிந்த பின்தான் இந்த

விஷயத்தையே சொல்வார்கள். இப்படி பல தடவை மின்தடை நேரிடுவதுண்டு. இது எப்போது சீராகுமோ?

— ஜே. நாகராஜ், திருச்சி - 12.

## ஜோக்ஸ்!

"உங்க கட்சியில தொண்டராய்ச் சேரும்போது கூட 'ரகசியப் பிரமாணம்' பண்ணி வைப்பாங்களா...?"

"தலைவரோட சொத்துக் கணக்கைத் தெரிஞ்சுக்கிட்டா வெளியில் சொல்லிடக்கூடாது பாருங்க!"

— கிரிஜா மணாளன், திருச்சி - 21.

"உங்க வீட்டை உள்புறம் ரொம்ப ரொம்ப அழகா டெக்கரேட் பண்ணிக் கட்டிட்டு வெளியில ஒரே அசிங்கமாயிருக்கறாப்ல கட்டியிருக்கீங்களே.. ஏங்க...?"

" 'யாராச்சும்' பார்த்துட்டு, நான் கட்டின விலையை விட ரொம்பக் குறைச்சுக் கேட்டு 'மிரட்டி' வாங்கிட்டாங்கன்னா போச்சே...!"

புத்தனாம்பட்டி சி. மணி,
திருச்சி — 18.

எங்கள் வகுப்பில் தமிழாசிரியர் ஒரு நாள் ஏதோ பாடம் நடத்திக் கொண்டிருந்த போது, "எப்பொழுதுமே பெண் புத்தி பின் புத்தி" என்று சொன்னார். உடனே ஒரு மாணவி எழுந்து, "ஐயா! அது பின்புத்தி அல்ல பின் (pin) புத்தி. மிகவும் கூர்மையானது" என்றாளே பார்க்கலாம்! ஆசிரியர் உள்பட அனைவரும் சிரித்து விட்டோம்.

— த. ரூபன்கதாகர், எறையூர் (தி.மா).

## வியாழன் கிரகத்திலும்...



- இரா. திலிப், திருச்சி - 14.

காலம் மாறிப் போச்சு! டாக்டர், என்ஜினியர், சி.ஏ. என்று படித்தால்தான் பிரகாசமான எதிர்காலம் என்று நினைக்கத் தேவையில்லை. எம்.பி.ஏ.வும் கம்ப்யூட்டரும் படித்தால்தான் கௌரவமான வேலை என்பதும் பழைய கதை! வந்து விட்டது ஃபாஷன் டெக்னாலஜி!

இதுவரை டெல்லியில் மட்டுமே இருந்து வந்த 'நேஷனல் இன்ஸ்டிடியூட் அப் ஃபாஷன் டெக்னாலஜி' (NIFT) கல்லூரி, இப்போது பம்பாய், கல்கத்தா, ஹைதராபாத், காந்தி நகர் (குஜராத்), சென்னை ஆகிய ஐந்து நகரங்களிலும் தனது கிளைகளைத் துவக்கி விட்டது.

டெல்லியில் மொத்தம் ஏழு கோர்ஸ்கள் இருந்தாலும் புதிதாகத் துவக்கப்பட்ட கிளைகளில் Fashion Design, Garment Manufacturing ஆகிய இரண்டு கோர்ஸ்களைத்தான் துவக்கியிருக்கிறார்கள்.

"இப்போதைக்குச் சென்னை எக்மோரில் கோ-ஆப்டெக்ஸ் வணிக வளாகத்தில்தான் கல்லூரிக்காக மாநில அரசு வகுப்பறைகளை ஒதுக்கிக் கொடுத்துள்ளது. தேவையான புதிய கட்டடங்களைக் கட்டுவதற்குக் கோளம்பாக்கத்தில் இடம்தருவதாகவும் கூறியுள்ளது. அப்போது –

"இன்னும் மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு படிப்படியாக மற்ற கோர்ஸ்களையும் கொண்டு வரப் போகிறோம்!" என்கிறார் சென்னை என்.ஐ.எஃப்.டியின் ரெஜிஸ்ட்ரார் எஸ். தேவதாஸ்.



• வகுப்பறையில்....

# ஃபாஷன் கற்றுத் தரும் கல்லூரி!

"ஃபாஷன் டெக்னாலஜி படிப்புக்கு எந்த அடிப்படையில் நல்ல எதிர்காலம் இருக்கிறது என்கிறீர்கள்?" தேவதாஸிடம் கேட்டோம்.

"என்ன இப்படிக் கேட்டு விட்டீர்கள்? இந்தியாவிலுள்ள மொத்த தொழிலகங்களின் உற்பத்தியில் ஜவுளி சம்பந்தமான தொழிலகங்களின் உற்பத்தி மட்டும் இருபது சதம்! 71-ம் ஆண்டு ஜவுளி ஏற்றுமதியின் மூலம் வெறும் 125 மில்லியன் ரூபாய்களை மட்டுமே பெற முடிந்த நாம் 92-ல் கிட்டத்தட்ட 81,000 மில்லியன் ரூபாய் பெற்றிருக்கிறோம், அதுவும் அந்நியச் செலாவணியாக! இதன் மூலம் இந்தியா முழுவதும் வேலை வாய்ப்புப் பெற்றிருப்பவர்களின் எண்ணிக்கை எவ்வளவு தெரியுமா? ஒரு கோடியே எழுபது லட்சம் பேர்!

"கடந்த இருபதாண்டுகளில்தான் இத்தனை அபார வளர்ச்சி. இதைக் கருத்தில் கொண்டு யோசித்தது மத்திய ஜவுளித் துறை



ஒரு ஃபாஷன் டிசைனர் தனது குறைந்தபட்ச சம்பளமாகவே எட்டாயிரம் ரூபாய் கேட்க முடியும். தருவதற்கு ஏராள மானவர்கள் காத்திருக்கிறார்கள்.





''ஜாதகம் ரொம்பப் பொருத்தமா இருக்கு...''

''அப்புறம்?''

''பெயர் ராசியும் பிரமாதம்...''

''பலே!''

''எதிர்காலத்துல பிள்ளைச் செல்வத்துக்கும் பொருள் செல்வத்துக்கும் பஞ்சமேயில்லே. ஜோஸ்யர் சொல்லிட்டார்.''

''பிறகென்ன... இன்னைக்கு ராத்திரியே ஓடிப் போய்டுவோம்!''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

அமைச்சகம். விளைவு? 86-ல் என்.ஐ.எஃப்.டி. கல்லூரியை டெல்லியில் துவக்கத் திட்டமிட்டு 87-ல் கோர்ஸ்கள் துவங்கின.''

''வெளிநாடுகளிலுள்ள இதுபோன்ற கல்லூரிகளின் தரத்துக்கு நமது கல்லூரியும் சொல்லித் தருமா?''

''நிச்சயமாக. நியூயார்க், இங்கிலாந்து, பாரிஸ் ஆகிய நகரங்களிலுள்ள ஃபாஷன் டெக்னாலஜி கல்லூரிகளோடு நமது கல்லூரியும் கூட்டுறவு வைத்திருப்பதால் அதே தரமுள்ள பாடங்கள்தான் இங்கும் சொல்லித் தரப்படுகின்றன. அதோடு நமது கலாசாரத்திலேயே ஊறிப் போயிருக்கும் கைவினை மற்றும் கலைத் திறமைகள் நமது மாணவ-மாணவியருக்கு மிகவும் கைகொடுப்பதால் நம்மவர்கள் அவர்களை விடவும் அதிகமாகப் பிரகாசிக்கும் வாய்ப்பும் இருக்கிறது!'' என்கிறார் தேவதாஸ்.

ஃபாஷன் டிசைன் கோர்ஸ்களில் சேருவதற்கான அடிப்படைத் தகுதிகள் என்ன?

மூன்றாண்டு படிப்பான ஃபாஷன் டிசைனுக்கு ஐம்பது சதம் மார்க்குகளுடன் +2 தேர்ச்சி பெற்றிருந்தால் போதும். இரண்டாண்டுப் படிப்பான கார்மெண்ட் மானுஃபாக்சரிங் டெக்னாலஜிக்கு ஐம்பது சதம் மார்க்குகளுடன் ஏதாவதொரு பட்டப் படிப்பு முடித்திருக்க வேண்டும்.

இது போதுமா? ஒவ்வொரு கோர்ஸிலும் முப்பது இடங்களே உள்ள நிலையில் மாணவர்களை எப்படித் தேர்ந்தெடுக்கிறார்கள்?

''ரொம்பவும் கஷ்டப்பட்டுத்தான் தேர்ந்தெடுக்கிறோம். அடிப்படைக் கல்வித் தகுதிகள் இருந்தால் மட்டும் போதாது. நாங்கள் வைக்கும் நுழைவுத் தேர்வுகளிலும் நேர்முகத் தேர்வுகளிலும் மாணவ - மாணவியர் வாங்கும் மார்க்குகளைப் பொறுத்தே தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஆக மொத்தம் திறமைதான் இதில் சேருவதற்கான முழு தகுதியையும் பெற்றுத் தருமேயொழிய, ஏதோ ஒன்று படித்தாக வேண்டுமே என்பதற்காகப் படிக்க வரும் மனோநிலையுள்ளவர்களுக்கு இங்கு இடமேயில்லை!'' என்கிறார்.

''இங்கே படிக்கும் அத்தனை பேருக்குமே வேலை வாய்ப்புகள் சாத்தியமா?''

''சாதாரண வேலை வாய்ப்பு மட்டுமல்ல; பிரகாசமான வேலை வாய்ப்பே சாத்தியம்! ஒரு ஃபாஷன் டிசைனர் தனது குறைந்த பட்ச சம்பளமாகவே எட்டாயிரம் ரூபாய் கேட்க முடியும். தருவதற்கு ஏராளமானவர்கள் காத்திருக்கிறார்கள். சொல்லப்போனால் படிக்கிற காலத்திலேயே மாணவ - மாணவியர்களை ஜவுளித் தொழிலகங்களிலுள்ளவர்கள் தங்கள் தொழிலகங்களில் வேலை வாய்ப்புத் தருவதாகச் சொல்லி விடுகிறார்கள். காரணம், நமது நாட்டில் ஃபாஷன் டெக்னாலஜி படித்தவர்களின் தேவை 37 லட்சம். தற்சமயம் இருப்பவர்களின் எண்ணிக்கையோ வெறும் இருபது லட்சம்தான்! இந்த நிலையில் வேலை வாய்ப்புக்கு என்ன குறைச்சல்?'' என்கிறார் தேவதாஸ்.

— இளங்கோவன்

அட்டையில் : மம்தா

அட்டை வண்ணப்படம் : யோகா



''அந்தம்மா கடையிலே சோப்பை வாங்கிட்டு தகராறு பண்றாங்களே, என்ன விஷயமாம்?''

''டி.வி விளம்பரத்துலே எலுமிச்சை அடங்கியதுன்னு சொல்றாங்களே, சோப்பு மட்டும் தர்றீங்களே, எலுமிச்சை எங்கேன்னு தகராறு பண்றாங்க.''

— டி.என். பாலகிருஷ்ணன்



# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990
பதிவு அலுவலகம்: 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2. ph: 848917
கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-600 015. போன்: 459569




### பிக்சட் டிபாசிட்

| 46நாள் | 3மாதம் | 6மாதம் | ஆண்டு | 2ஆண்டு | 3ஆண்டு | 4ஆண்டு | 5ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரு.50,000/- அதற்கு மேலும்

PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ. 25,000 | 60 மாதம் | ரூ. 70,000 |

### சொத்துக்கள் மீது கடன்

- வீடு / ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- மாத வட்டி ரூ.1.85 மட்டுமே
- விரைந்த சேவை.
- சென்னை மாநகராட்சி எல்லைக்குள் இருக்க வேண்டும்.



### நகைக்கடன்

- குறைந்த வட்டிக்கு கிடைக்கும்
- 10 கிராமுக்கு ரூ.3000 வழங்கப்படும்.
- R.D. கட்டத் தேவையில்லை
- எந்த சார்ஜும் வசூலிப்பதில்லை



**பாதுகாப்புப் பெட்டக வசதியும் உண்டு.**

# பென்ஷனர் நலத்திட்டம்

**20% P.a** ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும் காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.



சேர்மன்:
**P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
கந்தகோட்டம்,
சென்னை-600 003.
ஆலோசகர்
பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிட்.

இயக்குநர்கள் குழு
R.விவேகானந்தன் B.Com.,
(Chairman : Park Town Benefit Fund Ltd.)
A.சுப்பிரமணியன்
V.சண்முகவடிவு B.A.,
V.விஜயகோபால் B.Com., D.C.P.
M.ராஜேந்திரன்
P.ஏகாம்பரம்

பங்குதாரர்களுக்கு மட்டும்

H.O. Friday Holiday (It is a P.B. Group Concern) B.O. Tuesday Holiday

# எங்கும் வெடிகுண்டு


வெடிகுண்டு பார்சல் இருக்கிறதா..ஃபோன் வந்திருக்கு.. சோதனை போடணும்!
RAILWAY
TICKET BOOKING
அதெல்லாம் எந்தப் பார்சலா இருந்தாலும் பார்சல் செக்ஷன்ல போய்க் கேளுங்க.. நான் பிஸி!


என்னது.. கோர்ட்டில் வெடி குண்டு வச்சிருக்கீங்களா? அதுவும் அந்த மேசைக்குள்ளே வெடிக்கப் போகுதா?
ஐயையோ!.. இன்னும் நீதிபதி, வக்கீல்களெல்லாம் வரவேயில்லையே.. அதுக்குள்ளே என்னய்யா அவசரம்?...



அதெல்லாம் முடியாதும்மா... வெடிகுண்டு இருக்குன்னு எல்லா இடத்தையும் நாங்க சோதிக்கணும்.. இப்ப நீங்களே கொண் டையை அவிழ்க்கலேன்னா...

# ஏன்பதே பேச்சு...!

தங்கசாமி யாரு?

நான்தான்!

ஒரு பார்சல் வந்திருக்கு!

ஐயய்யோ!.. அது நானில்லே.. பக்கத்து வீடு!

ஹோட்டலில்..

சாருக்கு இட்லி பார்சலா?

அய்யய்யோ.. பார்சலா? வேண்டாம்.. கையிலேயே கொடு!

உண்ணாவிரதம்

ஆறுமணிக்கு உண்ணாவிரதம் முடிந்தவுடன் எல்லோருக்கும் ஒரு வெடிகுண்டு பார்சல்.. மன்னிக்கவும்.. பிரியாணி பார்சல் வழங்கப்படும்!

கிரெடிட் அனாலிசிஸ் அண்ட் ரிசர்ச் லிமிடெட் அமைப்பின் மதிப்பீட்டுக் குழு, "CARE A (FD)" மதிப்பீட்டை வழங்கியதைத் தொடர்ந்து, சான்மேக் பிக்சட் டெபாசிட்டுகளுக்கு சாதகமாக மேலும் பல சிறப்புகள் சேர்ந்துள்ளன. அசல் மற்றும் வட்டிக்கு பாதுகாப்பு போதிய அளவில் உள்ளது என்று கணிக்கப்பட்டுள்ளது. எனவே எங்கள் மீது நீங்கள் வைத்துள்ள நம்பிக்கை சரியானதே என்று புரிந்து கொண்டிருப்பீர்களே?




டெபாசிட்தாரர்கள் கொண்டுள்ள இந்த முழுமையான நம்பிக்கையின் காரணத்தால்தான் மற்றவர்கள் வியக்கும் வண்ணம் சான்மேக் இந்த அளவுக்கு உயர்ந்து பல சாதனைகளையும் படைத்திருக்கிறது.

பொது டெபாசிட்டுகள் ரூ. 25 கோடிக்கு உயர்ந்துவிட்டன ■ நிகர மதிப்பு ரூ. 9.5 கோடியாக உயர்ந்துள்ளது. ■ சடுபடுத்தப்பட்டுள்ள மொத்த நிதியானது ரூ. 50 கோடியைத் தாண்டிவிட்டது. ■ EPS இப்போது ரூ.5 (ஆண்டுக்கணிப்பிலானது) என்ற அளவில் உள்ளது. ■ கிளைகளின் எண்ணிக்கை 26 ஆக உயர்ந்துள்ளது.

இந்த CARE A (FD) மதிப்பீட்டுடன், தன் தகுதிக்கு உரிய மற்றும் ஓர் அங்கீகாரத்தை சான்மேக் பெறுகிறது. அத்துடன் இதனுடைய டெபாசிட் திட்டங்கள், சிறந்த பாதுகாப்புக்கான மற்றும் ஒரு முத்திரையைப் பெறுகின்றன.

__கிளைகள் :__ சென்னை: அண்ணா நகர் மேற்கு ✆ 6214454, 6262219. அண்ணா சாலை ✆ 8520921. அசோக் நகர் ✆ 4824525, 4824624, 4824625, 4824757. டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை ✆ 8258637, 8240051. மயிலாப்பூர் ✆ 4992488. புரசைவாக்கம் ✆ 6425036, தி. நகர். ✆ 8278515 தாம்பரம் ✆ 2366327. கோயம்புத்தூர் ✆ 446375. கடலூர் ✆ 22728. கும்பகோணம் ✆ 24844. மதுரை ✆ 23334.

# 2

ரஸியா அங்கிருந்து அவசரமாக அகன்றதும், இன்பசாகரன் அமைச்சரைப் பார்த்தான். "சி.பி.ஐ. பற்றி என்ன ஸார் பேசிட்டிருந்தீங்க? நல்ல விதமாத்தானே?"

"சம்பந்தமில்லாத விஷயத்துல எல்லாம் கூட மூக்கை நுழைப்பாங்கன்னு சொல்லிட்டிருந்தேன்" என்றார் ஐ.ஜி.

"எது சி.பி.ஐக்கு சம்பந்தமில்லாத விஷயம்?: இன்னிக்கு மத அடிப்படை வாதம்கிறது உலகளாவிய பிரச்னை. குண்டு வெடிக்கிறது திருவல்லிக்கேணில மட்டுமில்லே, பம்பாய்ல, காஷ்மீர்ல, கராச்சில, லண்டன்ல, நியூயார்க் வோர்ல்ட் டிரேட் ஸெண்டர்ல, ஒக்லஹோமால, ஜப்பான் பாதாள ரயில் ஸ்டேஷன்ல சயனைட் வாயு பரவுது..."

"யோவ், எனக்கும் நியூஸ் வீக், டைம் எல்லாம் வருதுய்யா, நானும் பார்க்கறேன்!"

"சரி, சரி, உங்க சண்டையை அப்புறம் வைச்சுக்குங்க" என்றார் மந்திரி. "சி.பி.ஐ. ஸார்...."

"பேரு இன்பசாகரன்."

"ஏன் மகிழ்ச்சிக் கடல்னு வைச்சுக்கறது!" கிண்டலடித்தார் ஐ.ஜி.

"நீங்க ஐ.ஜிங்கிறதை முதல்ல மொழி மாற்றம் பண்ணுங்க."

"அடடா, மறுபடி ஆரம்பிச்சுட்டீங்களா?"

"அவருக்கு



## சென்ற வாரம்

**சென்னையிலுள்ள, 'அகில பாரத ஹிந்து பரிவார்' அமைப்பின் அலுவலகத்தில் ஓர் இரவு குண்டு வெடிக்கிறது. அதே தெருவிலுள்ள ரஸியா வீட்டு மொட்டை மாடியில், குண்டு வெடிப்பில் சிக்கிய ஒருவனின் ஒரு கை துண்டித்து வந்து விழுகிறது. அதைக்கண்டு மிரண்டு கீழிறங்க எத்தனிக்கும் ரஸியா, ஒரு முரட்டு ஆசாமி தன் வீட்டுத் தோட்டச்சுவர் ஏறி உள்ளே குதிப்பதைக் கண்டு மிரள்கிறாள். அவசரமாக வீட்டுக்குள் நுழைய முற்பட்டவளை அந்த ஆள் ஒளிந்திருந்து மடக்கி, "நீ பார்த்த எதையும் வெளியே சொன்னால் தொலைத்து விடுவேன்!" என்று மிரட்டிப் போகிறான்.**

**புலன் விசாரிக்க வரும் போலீஸ், இந்த விஷயத்தில் சி.பி.ஐ மூக்கு நுழைப்பதை விரும்பவில்லை. என்றாலும் அங்கு வரும் சி.பி.ஐ அதிகாரி இன்பசாகரன், ரஸியாவைப் பார்க்கிறான். 'குண்டு வெடிப்பு பற்றி ரஸியாவுக்கு ஏதோ தெரிந்திருக்கிறது' என்பதைப் பார்த்தவுடன் தெரிந்து கொள்கிறான்.**

**இனி....**

# இருட்டு ஆவணங்கள்

**கி. ராஜேந்திரன்**

என்பேரில் விரோதம் ஒண்ணுமில்லே, ஸார்! ஃபிரெண்ட்லி ஆர்கியுமெண்ட்தான்... இன்னிக்கில்லேன்னாலும் நாளைக்கு தமிழக அரசுக்கு சி.பி.ஐ. உதவி தேவைப்படாமலா போகும்?"

"தேவைப்படும் போது கூப்பிடறோம்" என்றார் ஐ.ஜி. 'கிளம்பு; இடத்தைக் காலி பண்ணு' என்னும் பாவனையில் கை நீட்டினார்.

பற்றிக் குலுக்கினான். "நீங்க கூப்பிடும் போது நான் பிகு பண்ணிக்கமாட்டேன்; ஒத்துழைக்கத் தயாராயிருப்பேன்" என்றான். பிரிந்தான்.

யூனிஃபார்மை வைத்து அந்த வட்டாரத்தில் உள்ள கான்வெண்ட்டைக் கண்டு பிடித்துப் போனான். 'ஒரு மாணவியை முன்பின் தெரியாத ஒருவனுடன் அனுப்புவதா?' மதர் சுப்பீரியர் தலையசைத்தாள். "நோ! நோ!"

இன்பசாகரன் ஐ.டி. கார்டு எடுத்துக் காட்டினான். "காலை பேப்பர்ல பார்த்திருப்பீங்களே.. குண்டு வெடிப்பு சமாசாரம்.. உங்க கான்வெண்ட் மாணவி ஒருத்தி அந்தக் கட்டடத்துக்கு அருகே வசிக்கிறாள்."

"அவ பெற்றோரைப் போய்ப் பாருங்க."

"அவர்களை விட இவளுக்குத்தான் ஏதோ தெரிஞ்சிருக்கிறதா தோணுது. மேலும் பெரியவங்க 'நமக்கேன் வம்பு'ன்னு தயங்குவாங்க. குழந்தைகளுக்கு குண்டு தைரியம்."

"குழந்தையா?"

"ஒரு பேச்சுக்குச் சொன்னேன். பிளஸ் ஒன் அல்லது பிளஸ் டூ. மாசிலாமணி தெருவிலேர்ந்து வர்றவங்க இன்னும் எத்தனை பேர் இருந்துடப் போறாங்க? சுலபமா கண்டு பிடிக்கலாம்."

ரிஜிஸ்தர் வரவழைத்து, புரட்டிப் பார்த்து ரஸியாவை அழைத்து வர ஆள் அனுப்பினாள். "பெரிய ரிஸ்க் எடுத்துக்கறேன். ஏன் இங்கேயே பேசக் கூடாதா?"

"மனசு விட்டுப் பேசற சூழ்நிலை தேவை. உங்க எதிரே சுருண்டுடுவா. ரிஸ்க் இதுல ஒண்ணுமில்லே. சாயந்திரம் கேட்கிட்டே காத்திருந்து அவளை நான் அழைத்துப் போனால் உங்களுக்குத் தெரியவா போகுது? ஒரு அவசரம் கருதித்தான் உங்க கிட்ட அனுமதிக்கு வந்திருக்கேன்."

"நல்லா வாதம் பண்றீங்க.... எஸ்... கம் இன்... ரஸியா... இந்த அங்கிள் சி.பி.ஐ யைச் சேர்ந்தவரு. குண்டு வெடிப்பு சம்பந்தமா உன்னை ஏதோ கேட்கணுமாம். ஒத்துழைப்பது நம் கடமை இல்லையா?"

"எஸ், மதர்."

"பி கேர்ஃபுல் மிஸ்டர் இன்பசாகரன். என் ஸ்டுடெண்ட்டை ஜாக்கிரதையா பார்த்துக்குங்க" என்று அனுப்பி வைத்தாள்.

மதர் சுபீரியர் எதிரே அடக்க ஒடுக்கமாய் நின்ற ரஸியா, ஓட்டலில் ஐஸ்கிரீம் வழித்து எடுக்கும் போது விஷமமாகப் புன்னகைத்தாள்.

"நீங்க வருவீங்கன்னு நிச்சயமா தெரியும் ஸார்!"

"எப்படி?"

"உங்களைப் பார்த்தா புத்திசாலியா

தோணிச்சு!"

"தாங்க்ஸ்" என்று சிரித்தான். அவன் முகத்தில் இலேசாக எண்ணெய் இறங்கியிருந்தது. வியர்த்து விட்டதில் பவுடரெல்லாம் கரைந்து போய்விட்டது. காலையில் படிய வாரிப் பின்னியிருந்த கேசம் நெற்றி மீதாக அடங்காமல் நெளிந்தது. கண்களின் பளபளப்பு மட்டும் அத்தனை சோர்வையும் விரட்டி விட்டு, 'ஸீக்ரெட் ஆஃப் மை எனர்ஜி புரியுதா?' என்று கேட்டது.

"என்ன கண்டு பிடிச்சீங்க இதுவரை?"

"உன்னை; உனக்கு ஏதோ தெரியும் கிறதை."

"யூ இல்லோதானா? ஸ்பாட் இன்வெஸ்டிகேஷன்ல ஒண்ணுமே கண்டு பிடிக்கலையா?"

"என்னை அதுக்கு ஐஜி. அனுமதிக்கலை."

"ஏன்?"

"தெரிஞ்சாகணுமா? சரி, கேட்டுக்க. நான் சி.பி.ஐ. அவர் போலீஸ். சி.பி.ஐ. மத்திய அரசு சமாசாரம்; போலீஸ் வந்து ஸ்டேட் சப்ஜெக்ட். மாநில அரசின் அனுமதி இல்லாம நாங்க ஸ்டேட் சப்ஜெக்டை விசாரிக்க முடியாது."

"அப்ப, மத்திய அரசுன்னா ஆல் பவர்ஃபுல் இல்லியா?"

"இல்லே. அப்படி பல பேர் நினைக்கிறாங்க. தப்பு. நம்ம அரசியல் சாசனம் மாநில அரசின் உரிமைகள்; மத்திய அரசின் அதிகாரங்கள்; இரு தரப்பும் சேர்ந்து பயன்படுத்தக்கூடிய உரிமைகள்ன்னு பட்டியல் போட்டிருக்கு. நீ காலேஜ்ல பாலிடிக்ஸ் எடுத்துக்க, மந்திரியா வரலாம்; பிரதமரா கூட!"

"அதுக்கெல்லாம் படிப்பு எதுக்கு ஸார்?"

"சரியான கேள்வி. என்கிட்ட பதில் இல்லே. பிரான்ஸ் நாட்டிலே பாலிடிக்ஸ் படிக்காதவன் தேர்தலுக்கு நிற்க முடியாது."

"பாரீஸ் போயிருக்கீங்களா?"

"உம்."

"லண்டன்?"

"லண்டன், பிரஸ்ஸல்ஸ், பிராங்க்ஃபர்ட், ரோம்...."

"அமெரிக்கா?"

"எதிர்காலத்துல போவேன்."

"ரொம்ப செலவாகுமே; பூட்டான் லாட்டரிலே பிரைஸ் அடிச்சீங்களா?"

"சொந்தப் பணம் இல்லே. உத்யோகம் அழைச்சிட்டுப் போகும்."

"ஹைஹ! ஜாலிதான்!"

"இன்டர்போல் வேலைகள் ஜாலியானது இல்லே; சோகமானது; கஷ்டமானது; ஆபத்தானது கூட."

"சி.பி.ஐனு சொன்னீங்க?"

"சி.பி.ஐ யோட ஒரு பிரிவுதான். எங்களை இன்டர்போலுக்கு தத்துக் கொடுத்திருக்காங்க."

"சர்வதேச போலீஸ்ல வேலை பார்க்கிறது ஆபத்துன்னா, உங்களோட பேசிட்டிருக்கிறது மட்டும் ஆபத்தில்லையா, சார்?"

தூக்கி வாரிப் போட்டது இன்பசாகரனுக்கு. சற்று தயங்கி, "நீ சொல்றதை நான் மறுக்கலை; ஆனா உனக்குப் பாதுகாப்பு தருவோம்; நீயும் ஜாக்கிரதையா இருக்கணும்."

"நீங்க இருக்கும் போது எனக்கு என்ன ஸார் கவலை?"

"சினிமாவுல வர கமல், ரஜினி, அல்லது சரத்குமார் மாதிரி நான் பெரிய ஹீரோ இல்லே. ஒரே சமயத்துல பத்துப் பேரை 'டிஷ்யூம், டிஷ்யூம்'னு சமாளிப்பேன்னு நினைக்காதே."

"அதெல்லாம் இமேஜ் ஸார்! நீங்க ரியா லிடி. உங்களுக்கு என்ன வயசு ஸார்?"

"கமல், ரஜினியை விட குறைச்சல் இல்லே."

"நம்ப முடியலே ஸார், யூ லுக் வெரி யங்! பிரின்ஸ் சார்மிங்! ஸ்நோ ஒயிட் கதைல வர ராஜகுமாரன் மாதிரி...."

"எப்பவுமே நீ இப்படித்தான் லைட்டா பேசுவியா?"

"இல்லே ஸார் ஹோம்ஒர்க் பண்ணும் போது மட்டும் மூட் அவுட் ஆயிடும். திட்டிக்கிட்டே இருப்பேன். அது முடிஞ்சதும் உற்சாகம் திரும்பிடும்."

"ஒரு மாறுதலுக்காக லெட் அஸ் பி சீரியஸ்."

"ஓ.கே. நேத்து ராத்திரி என்ன நடந்தது, என்ன பார்த்தேன், கேட்டேன், அதானே?"

"யெஸ்."

சொன்னாள். குறுக்கிடாமல் கேட்டுவிட்டு கடைசியில் "மை காட்" என்றான்.

"யாரு ஸார் உங்க கடவுள்? திருப்பதியா? திருத்தணியா?"

"வா வீட்டுக்குப் போகலாம்; அம்மா இருப்பாங்கல்ல?"

"ரெண்டு பேரும் வேலைக்குப் போறவங்க ஸார். ஆனா எங்கிட்ட மூணாவது சாவி இருக்கு. நான்தானே தினம் முதல்ல வீடு திரும்பறவ."

"சரி கிளம்பு. மோட்டார் சைக்கிள் பின்னாடி உட்கார்ந்து பழக்கம் உண்டா?"

"ஓ யெஸ். டாடியோட ஸ்கூட்டர்ல நிறைய போயிருக்கேன்."

தேவைக்கு அதிகமாகவே அவன் மீது சாய்ந்தாள். மடியில் புத்தக மூட்டை.

'நான் உன் தந்தை இல்லை, பெண்ணே; புலன்களை வென்றவனும் இல்லை; கொஞ்சம் நிமிர்ந்து உட்கார்' என்று கூற முடியாமல் செலுத்தினான். 'ஒருவேளை இவள் குற்றமற்ற குழந்தை உள்ளத்துடன் பழக, கள்ளத்தை நாம் விதைப்பதாக ஆகிவிடக் கூடாது.'




# டெபாசிட் திட்டங்கள்

| ஃபிக்சட் டெபாசிட் | | |
|---|---|---|
| காலம் | வட்டி வகிதம் (ஆண்டிற்கு) | குறைந்த பட்ச டெபாசிட் தொகை |
| ஓர் ஆண்டு | **27%** | ரூ.10,000 |

**ஊக்கத் தொகை 3%**

| க்யூமுலேடிவ் டெபாசிட் | | | | |
|---|---|---|---|---|
| காலம் | டெபாசிட் தொகை | முதிர்வுத் தொகை | வருடாந்திர வட்டி | ஊக்கத் தொகை |
| 12 மாதம் | ரூ.10,000/- | ரூ.13,000/- | 30% | 4% |
| 24 மாதம் | ரூ.10,000/- | ரூ.16,500/- | 33% | 5% |
| 36 மாதம் | ரூ.10,000/- | ரூ.21,000/- | 36% | 7% |

## சக்தி பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.25,000
இரு மடங்காகிறது
33 மாதங்களில்
ரூ. 50,000
ஊக்கப்பரிசு
3 கிராம் தங்கக்காசு

## மகாசக்தி பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.25,000
மும் மடங்காகிறது
55 மாதங்களில்
ரூ. 75,000
ஊக்கப்பரிசு
5 கிராம் தங்கக்காசு



## ஈசன் இன்வெஸ்ட்மென்ட்ஸ்

நெ.66, பாண்டி பஜார் (பனகல் பார்க் அருகில்)
தியாகராய நகர், சென்னை - 600 017. போன்: 4341059
எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்

**ஈசன் - நம்பிக்கையின் சிறப்பு**

**வா**சலின் கம்பிக் கதவுகளைத் திறந்தால் மாடிப்படி. கீழ் போர்ஷனின் வாசல் உட்புறம் தாளிடப்பட்டிருந்தது. படியேறியதும் மறுபடி ஒரு பூட்டு திறந்து உள்ளே நுழைந்ததும், சீக்கிரம் என்று அவசரப்படுத்தினான். "கழுகோ, காக்காவோ அதைக் கொத்திக் கொண்டு போவதற்கு முன்னால்..."

"கன்னிப்பெட்டி ஒண்ணு போட்டு மூடித்தான் வைச்சிருக்கேன். மம்மி டாடிக்குக் கூடத் தெரியாது."

"குட் கேர்ல்."

"எனக்கும் கொஞ்சம் மூளை இருக்கில்லே?"

"சேஷன் சண்டைக்கு வருவாரேன்னு பார்க்கறேன். இல்லைன்னா இந்தியாவிலேயே பெஸ்ட் மூளை உன்னுதுதான்னு சர்டிஃபிகேட் கொடுப்பேன்!"

வேக நடை பயின்று, மொட்டை மாடிப்படியேறி கன்னிப் பெட்டி நீக்கினான்.



**"எங்க மானேஜர் ரொம்ப வித்தியாச மானவர்."**
**"அப்படியா?!"**
**"ஆமாம்; 'என் கையாலே அதிக மான மெமோ வாங்கினது நீ ஒருத்தன் தான்; அதுக்காக நீ எனக்கு ட்ரீட் கொடுக்கணும்'னு எங்கிட்ட சொன்னாரே!"**
**— வி. ரெங்கநாதன்**

பாக்கெட்டிலிருந்து பெரிய பிளாஸ்டிக் உறை ஒன்று எடுத்தான். கர்சீப்பால் வெட்டுப்பட்ட கரத்தின் ஒரு பகுதியை மூடி, அங்கு மூன்று விரல்களால் பற்றி எடுத்து உறைக்குள் இட்டான்.

கீழே இறங்கி வந்து ஒரு பழைய நியூஸ் பேப்பர் கேட்டு வாங்கி பொட்டலம் சுற்றிக் கொண்டான்.

"என்னை ஏன் ஸார் அவன் கொன்னு போடலை?"

வாசலை நோக்கி நடந்தவன் சட்டென்று நின்றான். 'பெண்ணே அடிக்கடி நீ என்னை திடுக்கிட வைக்கிறாய்' என்று நினைத்துக் கொண்டான். அவள் முகத்தில் பயத்தைக் காணோம். புன்னகைதான். கண்களில் குறுகுறுப்புதான். 'நடிப்பா? உண்மை உணர்ச்சிகளை ஒளித்துக் கொள்கிறாளா?'

"நிஜமாகவே எனக்குத் தெரியலை ரஸியா" என்ற போது அவனுக்கு தொண்டையை அடைத்தது. கனைத்துக் கொண்டான். "ஒரு வேளை தன் சகாவை இழந்த அதிர்ச்சியாயிருக்கலாம். அல்லது ரொம்பச் சின்னப் பொண்ணு நீ. உன்னைக் கொல்லக் கூடாது; மிரட்டி வைத்தாலே போதும்னு நினைச்சிருக்கலாம். உன்னோட அதிர்ஷ்டம் தான் துணை செய்திருக்கு."

"அதிர்ஷ்டம் என்னிக்கும் துணை இருக்குமா ஸார்? நான் உங்களை சந்திச்சதை அவங்க கவனிச்சிருக்கலாமில்லே? நீங்க என்னைத் தொடர்ந்தது போல அவங்களும் தொடர்ந்திருக்கலாம்லே?"

"குழந்தைத்தனமா பேசிக்கிட்டேவரே. திடீர்னு...."

"குண்டு வெடிச்சது போல பேசறேனா ஸார்? கவலைப்படாதீங்க; எதொன்னு ஆனாலும் என் தலை விதியைத்தான் நொந்துக்குவேன்; உங்களால வந்த ஆபத்துன்னு நினைக்க மாட்டேன். நீங்க உங்க கடமையைச் செய்யறீங்க..."

'இந்தச் சிறுமியிடம் தோற்று விட்டோம்; என்னைக் குற்றவாளியாக்கி அனுப்புகிறாள்' என்று எண்ணியவாறு விசிட்டிங் கார்ட் எடுத்துத் தந்தான். "ஏதாவது வித்தியாசமா நடந்துச்சன்னா, அல்லது ஒரு அவசரம் ஆபத்துன்னா... ஃபோன் பண்ணு. நான் இல்லேன்னாலும், 'அர்ஜண்ட் மெஸேஜ்'னு சொல்லி தகவல் கொடு." வேகமாக மாடிப்படி இறங்கி, இயலாமை கோபத்தைக் கிளற அதை மோட்டார் சைக்கிள் ஸ்டார்ட்டர் மீது காட்டி உதைத்தான்.

**ய**மாஹா அவனைச் சுமந்து கொண்டு போய் கடற்கரைச்சாலைக் கட்டடம் ஒன்றின் அருகே இறக்கியது.

நானிதழ் பொட்டலத்துடன் நடந்தான். "அனுபமா இருக்காங்களா?"

"யார் வந்திருக்கிறதா சொல்றது?"

"இன்பசாகரன்."

பியூன் திரும்புவதற்குள் அறையின் ஸ்பிரிங் கதவைத் திறந்து கொண்டு, சட்டம் போட்டது போல் நிலைவாசல் தோன்ற, மையத்தில் நின்றாள்.

'உடற் பயிற்சி தேவை; உணவு விஷயத்தில் கொஞ்சம் கவனம் செலுத்த வேண்டிய தருணம் நெருங்கி விட்டது' என்று உணர்த்துவது போன்ற உடல்வாகு, ஒரு செழுமையைக் காட்டிக் கவர்ந்தது. நல்ல உயரம். கதுப்புக் கன்னங்கள் சிவந்தன; குவிந்த அதரங்கள் புன்னகையில் விரிந்தன; கண்களோ புருவம் சுருக்கி மின்னலடித்தன!

'இது வரவேற்பா? வேண்டா வெறுப்பா?' தயங்கினான் இன்பா.

(தொடரும்)

எப்படி நம்ம படம்....

வோரா கமிட்டி



1995 ஆகஸ்ட் 13
யுவ ஆடி 28
மலர் : 54
இதழ் : 2

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



## டண்டூரி கொலையும் ஜனநாயகத்தின் நிலையும்...

நாட்டையே உலுக்கிய நைனா சகானி கொலை வழக்கில் இளைஞர் காங்கிரஸின் முன்னாள் தலைவர் ஒருவர் சம்பந்தப்பட்டிருப்பது வெளிச்சமானது. இதற்குப் பிறகு விழித்துக் கொண்ட எதிர்க்கட்சிகள், குற்றவாளிகளுக்கும் அரசியல்வாதிகளுக்கும் உள்ள தொடர்பை ஆராய்வதற்கு ஏற்கெனவே அமைக்கப்பட்ட வோரா கமிட்டியின் அறிக்கையை, பாராளுமன்றத்தில் வைக்க வேண்டும் என்று வற்புறுத்தின. அரசாங்கமும் வேறு வழியின்றி இசைந்தது.

ஏற்கெனவே நாம் அறிந்த பல கசப்பான உண்மைகளைத்தான் அந்த அறிக்கை ஊர்ஜிதப்படுத்தியிருக்கிறது.

அரசியல்வாதிகளுக்கும் குற்றவாளிகளுக்கும் இடையே வளர்ந்துவிட்ட தொடர்பைத் துண்டித்து, நிலைமையைச் சீர் செய்ய சில யோசனைகளையும் அவ்வறிக்கை முன்வைத்துள்ளது.

அவற்றுள் முக்கியமான இரு யோசனைகள்:

பொருளாதாரக் குற்றங்கள் இழைப்போருக்கு எதிரான சட்டங்கள் இன்னமும்




கடுமையாக்கப்படவேண்டும்.

ஒரு புதிய மத்திய புலனாய்வு அமைப்பு உருவாக்கப்பட வேண்டும். ஏற்கெனவே உள்ள அரசின் புலனாய்வுப் பிரிவுகள் இந்த அமைப்பிடம் அனைத்து உளவுத் தகவல்களையும் தெரிவிக்க வேண்டும். அத்தகவல்களின் அடிப்படையில் அவ்வமைப்பு நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

வோரா கமிட்டியின் இந்தச் சிபாரிசுகளை அமுல்படுத்தினால் மட்டுமே பிரச்னை தீர்ந்துவிடும் என உறுதியளிக்க முடியாது.

ஒரு மத்திய அமைப்பு நிறுவுவதன் மூலம், மீண்டும் அதிகாரக் குவிப்புக்கே வழி வகுக்கப்படுகிறது. சட்டங்கள் கடுமையாக்கப்படுவதால் குற்றங்கள் குறையும் என்றும் சொல்லிவிட முடியாது. அந்தச் சட்டங்களை அமுலாக்கும் நிலையிலுள்ள வர்கள் நேர்மையாக நடந்து கொள்ளாவிட்டால், இப்போது போலவே சட்டங்கள் மீறப்படும் அல்லது துஷ்பிரயோகம் செய்யப்படும்.

எனவே, சட்டங்களை மதிக்கும் நேர்மையாளர்கள், அதிகாரப் பொறுப்பு பெற்று ஆட்சிக்கு வருவது அவசியமாகிறது.

இது எவ்வாறு சாத்தியமாகும்?

ஜனநாயக அமைப்பில், சட்டங்களை விட மரபுகள் முக்கியமானவை. 'கட்சி சாயம் பூசாமல் உள்ளாட்சித் தேர்தல்களை நடத்த வேண்டும் என்பதை ஒரு மரபாகவே உருவாக்கலாம்' என்பது அண்ணாதுரை கூறிய யோசனை.

இந்த யோசனையைச் செயல்படுத்தினால் நேர்மையான, நல்ல தலைவர்களை மக்களே அடையாளம் காட்டி விடுவார்கள்.




**● வோரா கமிட்டியின் இந்தச் சிபாரிசுகளை ●**
**அமுல்படுத்தினால் மட்டுமே பிரச்னை**
**தீர்ந்துவிடும் என**
**● உறுதியளிக்க முடியாது. ●**

மக்கள் நலனில் அக்கறையுள்ள இந்தத் தலைவர்கள், பின்னர் பாராளுமன்றம் வரை வருவதற்கு அரசியல் கட்சிகளே ஆதரவு கொடுக்கும்.

எங்கேயோ இருக்கும் கட்சித் தலைமை, தொகுதி வேட்பாளர்களை 'ரிமோட் கன்ட்ரோல்' முறையில் தேர்ந்தெடுக்கும் தற்போதைய வழக்கமும் ஒழியும்.

இது நடைபெறுவதற்கு மேலும் உதவக் கூடியது உட்கட்சி ஜனநாயகம். அவ்வப்போது கட்சித் தேர்தல்கள் நடத்தப்பட்டு, தலைவர்கள் தேர்வானால் பணபலத்துக்கும் எதேச்சாதிகாரப் போக்குக்கும் இடமின்றிப் போய்விடும்.

உலகின் சிறந்த ஜனநாயக நாடுகளில் உள்ளதுபோல் இருகட்சி ஜனநாயக அமைப்பை நாம் கொண்டுவர முடியுமானால் மேலும் நல்லது.

அத்தகைய அமைப்பில், ஆளுங்கட்சிக்கு எதிராக அளிக்கப்படும் வாக்குகள், பல எதிர்க்கட்சிகளிடையே சிதறிப் பிரியும் நிலை இருக்காது. ஊழல் செய்து, குற்றவாளிகளை ஆதரிக்கும் ஒரு கட்சி, இந்த வோட்டுப் பிளவு காரணமாக மீண்டும் மீண்டும் ஆட்சிக்கு வரும் அவலமும் நீடிக்காது.

சட்டத்தின் இரும்புப் பிடியால் சாதிக்க முடியாததை, சீரிய மரபுகளின் மென்மையான வலியுறுத்தல் சாதித்துவிடும்.

**சி. வி. நரசிம்மன் –**

**சுதந்திர இந்தியாவின் முதல் பேட்ச் ஐ.பி.எஸ். ஆபீசர்களுள் முதல் ரேங்க்கில் தேறியவர். முதலில் மாநில காவல் துறை உயர் அதிகாரியாக இருந்து, பின் சி.பி.ஐ. டைரக்டராகவும் மத்திய அரசின் உள்துறை இணைச் செயலாளராகவும் மாறி மாறிப் பணியாற்றியவர். சவால்கள் நிறைந்த அவர் பணிக்கால அனுபவங்கள், அரசியல்வாதிகள் மற்றும் அதிகாரிகளின் நடத்தையையும் வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன!**

அரசியல் என்பது உணர்ச்சிமயமானது; அரசுக் கட்டுப்பாட்டில் இயங்கும் காவல் துறை என்பது அறிவுபூர்வமானது! இரண்டும் உரசுகிற போது எப்பேர்ப்பட்ட சிலிர்ப்பு நேர்கிறது!

நினைத்துப் பார்க்கிறேன்...

வருஷம் 1974.

டெல்லியில், சி.பி.ஐ.யில் டி.ஐ.ஜி.யாக ஆறு வருஷங்கள் பணியாற்றி விட்டு, ஸ்டேட் போலீஸ் டி.ஐ.ஜி.யாக (விஜிலன்ஸ் பிரிவு) மறுபடி பணியில் சேர்ந்து ஒரு வருஷம் ஆகியிருந்தது.

மத்தியில் இந்திரா காந்தி பிரதமராக – முதல் முறையாக – பொறுப்பேற்று ஆண்டு கொண்டிருந்த நேரம்.






# 1 கண்

திடீரென்று எனக்கொரு எதிர்பாராத அழைப்பு.

மத்திய அரசிடமிருந்து மாநில அரசுக்கு ஒரு அவசர வயர்லெஸ் தகவல்.

"C.V. Narasimhan is selected for appointment as Joint Secretary to Govt. in Home Ministry. He should join immediately."

வெகுநாட்களாகவே 'அரசுச் செயலர்களாக ஐ.ஏ.எஸ்களை மட்டும்தான் நியமிக்க வேண்டுமா? ஏன் ஐ.பி.எஸ். ஆபீசர்களுக்கும் அந்த கௌரவம் கூடாது?' என்று எங்கள் பக்கத்திலிருந்து கேட்டுக் கொண்டுதான் இருந்தார்கள்.

சுதந்திர இந்தியாவின் முதல் பேட்ச் ஐ.பி.எஸ். ஆபீசர்களுள் ஒருவனான எனக்கு அந்த வாய்ப்பு வந்து கதவைத் தட்டிய போது, வெகு சந்தோஷமாக ஒப்புக் கொண்டு, டெல்லிக்கு ரயில் ஏறினேன்! உள் துறை செயலகத்தில் ஜாயின்ட் செகரட்டரியாக '74 பிப்ரவரியில் பொறுப்பேற்றேன்! அப்போதுதான் பிரதமர் இந்திரா காந்தியைச் சற்று உள்ளார்ந்து பார்க்க முடிந்தது. எத்தகைய பெண்மணி அவர்!

எதைச் செய்ய வேண்டும் என்பதில் தெளிவு;

எப்படிச் செய்ய வேண்டும் என்பதில் உறுதி;

எப்படியும் முடிக்க வேண்டும் என்கிற உத்வேகம்!

இதுதான் இந்திரா காந்தி!

உள்துறை இணைச்செயலாளராக அவர் ஆட்சியில் நான் பணியாற்றிக் கொண்டிருந்த போது, இரண்டு முக்கிய சம்பவங்களைச் சந்திக்க நேர்ந்தது. வாழ்க்கையில் மறக்கவே முடியாத சம்பவங்கள்!

காவல்துறைப் பணியிலும் சரி, அரசுச் செயலர் பணியிலும் சரி, நேரடியாகப் பார்வையில் படும் விஷயங்களுக்கு அப்பால், ஆராய்ச்சிக்கும் கவனிப்புக்கும் உரிய முக்கியமான விஷயங்கள் – 'மூன்றாவது கண்'ணுக்கு வேலை தரும் விஷயங்கள் – இருப்பதை அந்தச் சம்பவங்கள் வலுவாக உணர்த்தின.

முதலாவது சம்பவம் : ஏப்ரல் 1974-ல் நடந்த நாடு தழுவிய ரயில்வே ஸ்டிரைக்.

எனக்கு முற்றிலும் புதிதான உள்துறைப் பணிகளில் பழக ஆரம்பித்து, அப்போது தான் லேசாக ஒரு தெளிவு பிறந்திருந்த நேரம்... எனக்கு மேல் இரண்டே அதிகாரி கள். கூடுதல் செயலாளர் சீனிவாச வரதன் (மத்திய பிரதேச கேடர் ஐ.ஏ.எஸ்.), செய லாளர் என்.கே. முகர்ஜி ஐ.சி.எஸ்.

எங்கள் நடவடிக்கைகள் ஒவ்வொன்றும் உள்துறை அமைச்சர் உமாசங்கர் தீட்சித் மூலம் பிரதமரின் நேரடி கவனத்துக்குப் போய்க் கொண்டிருந்தது....

ஏப்ரல் '74-ல் ரயில்வே ஸ்டிரைக் அறி வித்ததுதான் தாமதம்...

"எக்காரணம் கொண்டும் இந்த ஸ்டிரைக் வெற்றி பெறக் கூடாது!" என்று இந்திரா ஒரே வரியில் தம் எண்ணத்தை எங்களுக்கு வெளிப்படுத்தி விட்டார்.

அதற்கு அர்த்தம், "Act immediately" என்பது.

நாடு தழுவிய அந்த ஸ்டிரைக்கின் பிதா மகர் – ஜார்ஜ் பெர்ணாண்டஸ்! பம்பாயின் மிகப் பெரிய ட்ரேட் யூனியன் தலைவர்! விரலசைத்தால், செயலாற்ற ஆயிரக்கணக் கில் தொழிலாளர்கள் அவர் பின்னால் காத் திருந்தனர்.

சுதந்திர இந்தியாவில், முதல் மாபெரும் வேலை நிறுத்த அறிவிப்பு அது! அது மட் டும் நடந்து விட்டால் இழப்பு ஒருபுறம் இருக்க, அரசுக்கு எப்படிப்பட்ட அவமா னம்! ஊதிய உயர்வு உள்ளிட்ட சில நிர்வா கக் காரணங்களுக்கான போராட்டம்தான் அது என்றாலும், "நாலே நாளில் நாடு எப் படி ஸ்தம்பிக்கிறது பார்!" என்ற ஜார்ஜ் பெர்ணாண்டஸின் கூக்குரல், வரப் போகிற பேரபாயத்தை உணர்த்தியது!

எப்படியும் ஸ்டிரைக் முறியடிக்கப்பட வேண்டும் என்று பிரதமர் சொல்லி விட்ட போதிலும், கடைசி நிமிடம் வரை சமரச பேச்சு வார்த்தைகளையும் நடத்த ரயில்வே நிர்வாகத்துக்குக் கட்டளையிட்டார்!

இப் பேச்சு வார்த்தைகள் பயன் தராமல் ஒருவேளை ஸ்டிரைக் ஆரம்பமாகி விட் டால்? அதற்கான நடவடிக்கைகளையும் எடுத் தாக வேண்டும்! அதே சமயம் பேச்சு வார்த் தையும் தடைபடக் கூடாது. சிக்கல் இங்கே தான்!

அந்த அவசர, அவசியப் பணி உள்துறை யின் தலையில் விழுந்தது!

தமக்கு என்ன வேண்டும் என்பதைக் கோடி காட்டி விட்டு, பொறுப்பை உரியவர் களிடம் விட்டு, ஒதுங்கி நின்று உற்று



**"நாலே நாளில் நாடு எப்படி ஸ்தம்பிக்கிறது பார்!" என்ற ஜார்ஜ் பெர்ணாண்டஸின் கூக்குரல், வரப் போகிற பேரபாயத்தை உணர்த்தியது!**

நோக்குவது இந்திராகாந்தியின் அப்போ தைய சிறப்பான பாணி.

நாங்கள் செயல்பட ஆரம்பித்தோம்.

இதற்கிடையில் ஸ்டிரைக் அறிவிக்கப் பட்டு, நடைமுறைக்கு வரப் போகிற அந்த நாள் நெருங்கிக் கொண்டிருக்க... அரசின் தடுப்பு முயற்சிகள் முற்றிலும் தகர்ந்து போய், ஒரு புரட்சி போல நாடு முழுவதும் ரயில்வே தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தைத் தொடங்கினர்!

எங்கள் இரவுகள், தூக்கம் இல்லாது போயின! உடனே ஏதாவது செய்தாக வேண்டும்.

## சி.வி. நரசிம்மன்

"இந்த ஸ்டிரைக் ஒருக்காலும் வெற்றி பெறக் கூடாது!" – பிரதமரின் குரல் செவி களில் ஒலிக்க,

சட்டென்று அந்தத் திட்டம் தோன்றி யது!

அது –

டிஃபன்ஸ் ஆஃப் இந்தியா ஆக்ட்!

1971– பங்களாதேஷுடனான போர்க்

காலத்தில் பிரகடனப்படுத்தப்பட்டு, பின் இடப்பில் போடப்பட்ட சட்டம். போர்க் கால நடவடிக்கைகளுக்காகவென்றே உருவாக்கப்பட்ட சட்டம்! மிசா, தடாவுக்கெல்லாம் அது தாத்தா!

வழி கண்டறியப்பட்டதும் எங்கள் குழு சுறுசுறுப்படைந்தது. உடனடியாக ஜார்ஜ் பெர்ணாண்டஸைக் கைது செய்ய முடிவு செய்தோம்.

ஆனால் அவரை எங்கே போய்த் தேடுவது? அவர் லக்னோ அருகில் எங்கோ தலைமறைவாக இருந்தார்.

ஒரு சிறப்பு விமானத்தை லக்னோவுக்கு அனுப்பினோம் – பெர்னாண்டஸைத் தேட!

தேடிப் பிடித்து அவரைக் கைது செய்ததுதான் தாமதம்... உடனே நாடு முழுவதும் – அனைத்து தலைமைச் செயலாளர்களுக்கும் ஒயர்லெஸ் மூலம் தகவல் அனுப்பி ஸ்டிரைக் நடத்தும் முக்கிய தலைவர்களைக் கைது செய்ய உத்தரவு அனுப்பினேன்.

இது ஒருபுறம் நடந்து கொண்டிருக்க, இன்னொருபுறம் – ரயில்வே ஊழியர்கள் குடியிருப்புப் பகுதிகளுக்கு தினம் காலை இரண்டு லாரிகள் அனுப்புவோம்.

வேலைக்குச் செல்ல விரும்புபவர்களை ஒரு லாரியில் ஏற்றி, பத்திரமாக அவர்கள் பணி இடத்திற்கு அனுப்பி விடுவோம். ஸ்டிரைக்கை ஆதரித்து, பணிக்கு வர மறுப்பவர்களை இன்னொரு லாரியில் ஏற்றி கோர்ட்டுக்குக் கொண்டு போய், உத்தரவு வாங்கிச் சிறையில் அடைத்து விடுவோம்!

இது மாதிரி நடவடிக்கைகளுக்கு அந்த Defence of India Act மிக உதவிகரமாக இருந்தது.

தினம் காலை பதினோரு மணிக்கு உள்துறை அலுவலகத்தில் முகர்ஜி, சீனிவாசவரதன், சிறப்பு புலனாய்வுத் துறை இயக்குநர், பிரதமரின் நேரடிச் செயலாளர் மற்றும் நான்... இப்படி ஐந்தாறு பேர் கூடி என்ன செய்ய வேண்டும் என்பது குறித்து விவாதித்து, ஒரு முடிவெடுத்து, உடனே அதைச் செயல்படுத்த உத்தரவுகள் அனுப்பி விடுவோம்.

காவல் துறையில் நான் பெற்ற அனுபவம், Defence of India Act-ல் உள்ள எந்தெந்தப் பிரிவுகள், எந்தெந்த சூழல்களைச் சமாளிக்க நடைமுறையில் உபயோகமாகும் என்று என்னால் விவரமாகவும் தெளிவாகவும் கூற உதவியது. நான் மாநிலங்களுக்கு அனுப்பிய வயர்லெஸ் தகவல்களில் இவ் விவரங்களைக் குறிப்பிட்டு அனுப்பினேன். இவை அனைத்தும் எங்கள் கூட்டத்தில், அன்றாட நிலைமையை அலசி விவாதித்து எடுத்த முடிவுகளைப் பிரதிபலித்தன. இதற்கென்று தனியாக 'file' போட்டு, குறிப்புகளை எழுதி நேரத்தை வீணாக்காமல், கூர்மையான விவாதத்துக்குப் பின் உடனடியாக உத்தரவுகள் அனுப்பிச் செயல்பட்டேன். அது எனக்கு ஒரு புதிய, மாறுபட்ட அனுபவம்!

எங்கள் ரகசியக் கூட்டத்துக்கு ரயில்வே போர்டு சேர்மனும் வருவார்.

அவரது ஒத்துழைப்புடன், 'நாட்டின் மிக முக்கிய ஒன்பது ரயில்வே சந்திப்புகளில் ரயில் போக்குவரத்து இடைஞ்சலில்லாமல் இருந்தால் போதும்; மற்ற இடங்களைச் சுலபமாக சகஜ நிலைக்குக் கொண்டு வந்து விடலாம்' என்பதைக் கண்டறிந்து, தமிழ் நாட்டில் திருச்சி உட்பட அந்த ஒன்பது நிலையங்களில் கூடுதல் பாதுகாப்பு, கூடுதல் தொடர்பு வசதி என்று ஏற்பாடுகள் செய்து – பெரும் முயற்சிக்குப் பின்னால், ஸ்டிரைக் ஆரம்பித்த நாலைந்து நாட்களிலேயே அதை வெற்றிகரமாக முறியடித்தோம்!

மறுநாள், பிரதமர் முகத்தில் வெற்றிப் பெருமிதப் புன்னகையைப் பார்த்தோம். அதற்காகத்தானே இத்தனையும்!

ஆனால், அந்தப் புன்னகை மாறி, அவர் குரல் ஓங்கி ஒலித்து, நாடே பிரளயம் வந்த மாதிரி அஞ்சி நடுநடுங்கிய ஒரு இருண்ட காலத்தை விரைவிலேயே அவர் பக்கத்திலிருந்து நான் பார்க்க நேர்ந்தது...

அது –

எமர்ஜென்ஸி!

(அடுத்த வாரம்)

---

### ஏன் அழுதார் லால் பகதூர் சாஸ்திரி?

**1965**–ஆம் ஆண்டில் இந்தியா-பாகிஸ்தான் யுத்தம் முடிந்ததும் ஹரியானா (பஞ்சாப்) ஆஸ்பத்திரி ஒன்றில் உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்த மேஜர் பூபிந்தர் சிங்கைக் காண பிரதம மந்திரி சாஸ்திரி வந்து வார்டுக்குள் நுழைந்ததும் மேஜர் சிங் விம்மி விம்மி அழ ஆரம்பித்தார். 'சாகசத்திற்குப் பேர் போன பஞ்சாபியான நீ இப்படி அழலாமா?' என்று கேட்டார் சாஸ்திரி. 'நான் மடியும் தறுவாயில் இருப்பதற்காக அழவில்லை. என் உடல்நிலை குறித்து விசாரிக்க பாரதப் பிரதமரே வந்திருக்கும்போது எழுந்து நின்று சல்யூட் அடித்து மரியாதை செய்ய முடியாத நிலையில் இருப்பதை எண்ணி அழுகிறேன்,' என்றார் அந்த வீரர்!



இதைக் கேட்ட லால்பகதூர் சாஸ்திரியின் கண்கள் கலங்கின.

'வேறு எந்த சமயத்திலும் என் தந்தை அழுது நான் பார்த்ததில்லை' என்றார் லால்பகதூர் சாஸ்திரியின் மகன் சுனில் சாஸ்திரி.

ஆதாரம் : சுனில் நூல்

தகவல் : கே. பொன்னு

# Kalki Shopping Page



ADYAR

## STUDENTS XEROX

*Quality that is close to perfection*

XEROX
LASER PRINTING
WORD PROCESSING
DTP
ELECTRONIC & MANUAL TYPING
BINDING & LAMINATION

## RANI SAREES

CHECK THE CLOTH LABEL AND PURCHASE

## BENGAL COTTON SAREES

BEST QUALITY ATTRACTIVE DESIGNS AND COLOURS
10% DISCOUNT ON BENGAL COTTON ONLY.
AVAILABLE ON WHOLE SALE ALSO

**MADURAI TEXTILES**
2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZZAR,
MADRAS-17.
(Nearer to Vegetable Market)

புருஷேஷு ராமா : புஷ்பேஷு ரோஜா, நாரீஷு ரம்பா : நகரேஷு காஞ்சி

## நடராஜ் எஸ்டேட்ஸ்

வழங்கும்

## பண்ணை வீடு - FARM HOUSE

❑ உங்கள் வாராந்திர விடுமுறை நாட்களை - மகிழ்ச்சியுடனும், நிம்மதியுடனும் கழிப்பதற்கு அமைதியான, அழகான சூழ்நிலை

**2 கிரவுண்ட் 4800 ச. அடி ❑ 10 தேக்குமரங்கள்**

❑ 10 தேக்கு மரங்களுடன் தென்னை, மா, பலா, வாழை, காய்கறிகள், பூச்செடிகள் முதலியவற்றுடன் - அழகான சகல வசதிகளுடன் கூடிய காட்டேஜ்

**10 தேக்கு மரங்களின் மதிப்பு 15 ஆண்டுகளில் பல லட்சம் ரூபாய்கள்**

❑ சென்னை - பெங்களூர் நெடுஞ்சாலையில் காஞ்சிபுரத்துக்கு அருகே - பஸ் ரூட்டில் தயாராகிறது. ஏமாற்றத்தைத் தவிர்க்க இன்றே முன் பணம் செலுத்தி பதிவு செய்து கொள்ளுங்கள். மாதத் தவணை ரூ.1000, ரூ.2000, ரூ.5000 மொத்தமாக பணம் செலுத்துபவர்களுக்கு 10% தள்ளுபடி உண்டு. மேலும் விபரங்களுக்கு :

**Phone : 4342098, 4840150**



**NATARAJ ESTATES (Farm House Promoters)**
"Shanthi Complex" 3rd Floor, 26, Ranganathan Street,
T. Nagar, Madras - 600 017. B.O. Kancheepuram.
Tanjore Office : 2-B, Selvam Nagar, T.P.S. Bus Stop,
Medical College Road, Tanjore - 613007.



NATARAJ GROUP OF COMPANIES:
**NATARAJ FINANCE, NATARAJ CHITS (TAMILNADU) PVT. LTD., NATARAJ EXPORTS OVERSEAS, NATARAJ OIL MILLS, NATARAJ PUBLICATIONS.**

# ஒரு தலம்; ஒரு பாடல்; ஒரு நயம் — 2

அந்தச் சின்னப் பயலுக்குத்தான் எத்தனை நெஞ்சழுத்தம்! அடித்தாலும் உதைத்தாலும் அசரவில்லையே. கத்தியும் நெருப்பும் கடும் விஷமும் கண்டும் கலங்கவில்லையே. பூ நிறக் கண்கள் புனல் உக நின்று ஹரி ஹரி என்று ஜபிக்கும் ராட்சஸ பிஞ்சு, தேவ நினைப்பில் தெம்பாய் இருந்தது. அதன் பெயர் பிரஹ்லாதன். இரண்யனின் புதல்வன்.

பகலில், இரவில், மண்ணில், வானில், உள்ளில் வெளியில், மனிதனால், விலங்கால், ஆயுதத்தால், நெருப்பால், மரணம் வரக் கூடாது என்ற வரம் பெற்று மரணத்தின் பாதைகளை மூடிவைத்துக் கொண்டவன் இரண்யன். தோள் வலி, ஆள்வலி மற்ற தவ வலிமை சேர்ந்ததால் விண்ணும் மண்ணும் அடிமை கொண்டு நிரந்தரத் தலைமை தனக்கே என்று உலவிய தனிப் பெருந் தலைவன் இரண்யன்.

வேதத்தின் சிரஸில் ஜொலித்த நாராயண மந்திர ஒலி நீக்கம் செய்து 'ஓம் இரண்யனே நமஹா' என்ற மந்திரத்தை அந்தணர், முனிவர், அனைவர் நாவிலும் பச்சை குத்தியவன் அந்தப் பாதகன். அவனது வித்தாக விளைந்த மகனே பிரஹ்லாதன். அவனோ - தந்தையும் ஒரு விதையின் விளைவே என்று உணர்ந்து - மூலம் எது எனத் தேர்ந்து அந்த நாராயண ஒலியில் லயிக்கத் தொடங்கினான்.

இருவரும் மோதினர். இந்த மோதல் இரண்யனுக்கும் பிரஹ்லாதனுக்கும் இல்லை. நிலைத்த பரம் பொருளை அடிமை கொள்ள நினைத்த இரண்ய ஆணவமும், பரம் பொருளுக்கு அடிமை பூண்ட பிரஹ்லாத சரணாகதியும் ஒன்றோடொன்று மோதின. ஆணவத்துக்கும் சரணாகதிக்கும் நடந்த மோதலில் சரணாகதி சரித்திரம் படைத்தது. ஆணவம் அழிந்தது.

"எங்கு உளன் உன் ஹரி?" என்றது ஆணவம்.

"எங்கும் உளன் நம் ஹரி" என்றது சரணாகதி.

"இங்கு உளனா?" என்று கை வைத்து சாய்ந்து கொண்டிருந்த தூணைத் தட்டியது ஆணவம். மிக நெடிய உயரம் உடையவன் இரண்யன். எனவே அரண்மனையில் அவன் குனியாமல் நுழையும்படி அவன் உயரத்தை அளந்து இட்ட தூண் அது. பெரியாழ்வார் இதனால் 'அளந்து இட்ட தூணை அவன் தட்ட' என்று பாடினார். அவன் தட்ட என்பதில் அழகு உண்டு. வேறு யாராவது தட்டி, தூணில் இருந்து ஹரி வந்தால், தட்டியவர் கையில் வைத்திருந்து தூணுக்குள் விட்டுவிட்டார் என்று பேசவாய்ப்புண்டு. அணுவுக்குள் அணுவான அதி ஆற்றல் தூணில் இருக்காதா? 'தூணில் உண்டு' என்று பிரஹ்லாதன் கூறியதும் இடி விழ்ந்த வண்ணம் தூணில் அடிவிழ்ந்தது.

திசை திறந்தது. அண்டம் கீறியது. விழி சிவந்த செங்கட் சீயம் ஆஹா என்று சிரித்தது. அப்படி ஒரு உருவை யாரும் கண்டதில்லை.

அந்த வடிவமே புதுமையானது. முதன்மையானது. முன்னும் பின்னும் அப்படி ஒரு வடிவம் கிடையாது. அந்த வடிவுக்கு அப்பா நரசிம்மம், அம்மா நரசிம்மம் என்கிற முன்னோடிகள் கிடையாது. இறைவன் சுயமாகத் தோன்றுபவன் என்பதன் நிரூபணம் அந்த சொரூபம்.

பகலில் இரவில் மரணம் இல்லை என்ற வார்த்தைக்காக இவை சந்திக்கும் அந்திப் பொழுது அந்திமப் பொழுதானது. உள்ளேயும் வேண்டாம். வெளியிலும் வேண்டாம் என்றால் வாசலில் அவன் வாழ்வு முடிந்தது. ஆயுதங்களால் அழிவில்லை என்றதால் சிங்க நகங்கள் அவன் இறுதி அத்யாயத்தை எழுதின. சத்யத்தின் வடிவான இறைவன் எல்லாச் சத்தியங்களையும் காப்பாற்றி அசத்தியத்தை அழித்து முடித்தான். ஆக்ரோஷமாக வெளிப்பட்ட பெருமான் சினம் கண்டு தேவர்கள் நடுங்கினர்.

சிங்கப் பெருமான் சினம் தணிக்க, பிராட்டியாரை அவர் எதிரில் செல்லும்படி தேவர்கள் வேண்டினர். எவ்வளவு அவசரமாகப் பாற்கடலில் இருந்து புறப்பட்டாலும் எங்கே எப்படி செல்கிறோம் என்று சொல்லிக் கொண்டு புறப்படும் பெருமான் இப்படி ஒரு வடிவம் எடுப்பதாகச் சொல்லாமல் வந்ததால் - படுரகசியமாக வைத்திருந்த விஷயம் இது என்பதால் - பிராட்டியே திகைத்து விட்டாள். ஆனால் இரண்யனை அழிக்க வெயிலாய் விழித்தவர் பிரஹ்லாதனை நோக்கி கருணை பொழிந்தார்.

ஒரே நேரத்தில் பகைவருக்குச் சூரியனாய்ச் சுட்டு பக்தருக்குச் சந்திரனாய்க் குளிரும் திருமுகத்தை 'கார் மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்' என்கிறது திருப்பாவை. தாய்ச் சிங்கம் தன் மடி முட்டிப் பால் குடிக்கும் குட்டிகளை நாவால் தடவி, கண்களால் கருணை பொழியும் போதே - வேற்று விலங்குகளை விழியாலே விரட்டும். அது போலே சூரியனாய் இரண்யனை எரித்து, சந்திரனாய்

## சிங்கமும் வணங்கும் சிங்கவேள் குன்றம்!

பிரஹ்லாதனுக்குக் குளிர்ந்து கதிர் மதியம் போல் முகத்தனாய் விளங்கினார் சிங்கப்பிரான்.

இந்தச் சிங்கப் பெருமான் குடி இருக்கும் சிறப்புத்தலம் அகோபிலம். சிங்கவேள் குன்று என்பது செந்தமிழ் வழக்கு. திருமங்கையாழ்வார் தித்திக்கும் தமிழாலே மங்களாசாசனம் செய்த தெய்வப்பதி இத்தலம்.

***"அங்கண் ஞாலம் அஞ்ச அங்கு ஓர் அளி அரியாய் அவுணன்***
***பொங்கு ஆகம் வன் உகிரால் போழ்ந்த புனிதன் இடம்***
***பைங்கண் ஆனைக் கொம்புகொண்டு பத்திமையால் அடிக்கீழ்ச்***
***செங்கண் ஆளியிட்டிறைஞ்சும் சிங்கவேள் குன்றமே.***

என்பது அவர்தம் திருவாக்கு.

இந்த மிகப் பெரிய உலகமே அஞ்சி நடுங்கும்படியாக, நரசிம்ம அவதாரம் கொண்டு அரக்கனின் மார்பைப் பிளந்த புனிதனின் இடம். அங்குள்ள சிங்கங்கள் ஆனைகளைக் கொன்றாலும் அவற்றின் தந்தத்தைக் கொணர்ந்து சிங்கப் பெருமானுக்குக் காணிக்கை வைக்கும் என்கிற ஆழ்வாரின் கற்பனை பக்தி உணர்வின் வெளிப்பாடு.

இந்தச் சிங்கவேள் குன்று ஆந்திரமாநிலத்தில் கர்னூல் மாவட்டத்தில் சிரவேல் தாலுகாவில் உள்ளது. நந்தியால் என்ற ஊரிலிருந்து முப்பத்தேழுமைல் தொலைவுடையது.

பெருமானைச் சுமக்கும் பேறு தனக்கு எப்போதும் வேண்டும் என்று கருடன் தவமிருந்ததால் கருடாத்ரி என்றும், சோமுகன் என்ற அசுரனால் அபகரிக்கப்பட்ட வேதங்களைத் திருமால் மீட்டதும் இனி இத்துயர் தமக்கு வரக் கூடாது என்று வேதங்கள் வேண்டித் தவமிருந்த இடம் என்பதால் வேதாத்ரி என்றும் இத்தலம் பெயர் பெற்றது. அத்ரி என்றால் மலை என்று பொருள். இரண்ய சம்ஹாரத்தலம் என்பதால் வீரக்ஷேத்ரம் என்றும் பெயர் உண்டு. ஆச்சர்யமான குகை என்பதால் அகோபிலம் எனப் பட்டது. மலை அடிவாரம் கீழ் அகோபிலம் என்றும் கடல் மட்டத்திற்கு 3000 அடி மேலே உள்ளபகுதி மேல் அகோபிலம் என்றும் பெயர் பெறும்.

கருடாத்ரி வேதாத்ரி என்கிற இருகுன்றுக்கும் இடையுள்ள பாவநாசினி புண்யதீர்த்தம். மற்றும் இந்திர தீர்த்தம், நரசிம்ம தீர்த்தம், கஜ தீர்த்தம், பார்க்கவ தீர்த்தம் ஆகியவை புகழ் உடைய புண்ய தீர்த்தங்கள்.

கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் குகையில் கற்பாறையில் கடைந்தெடுக்கப்பற்ற திருக்கோவிலில் எழுந்தருளி உள்ள உக்கிர நரசிம்மரே இத்தலத்தின் நாயகர். தாயார் செஞ்சு லட்சுமி. மேலும் ஒன்பது நரசிம்ம மூர்த்தங்கள் அத்தலத்திலிருந்து அருள் பாலிக்கின்றனர். காரஞ்ச நரசிம்மர், ஸ்தம்ப நரசிம்மர், ஜ்வாலா நரசிம்மர், கார்கோட நரசிம்மர், சத்தரவட நரசிம்மர், யோக நரசிம்மர், பாவன நரசிம்மர், பார்கவ நரசிம்மர், மாலோல நரசிம்மர் தவிர மேலும் பிரஹ்லாத நரசிம்மர், யோகானந்த நரசிம்மர் ஆகிய மூர்த்தங்களும் உண்டு.

இந்த மூர்த்தியை ஆராதிக்கும் அழகியசிங்கர் மடம் கல்வி, தவ ஒழுக்கம் மிக்க சான்றோர்களால் அலங்கரிக்கப்பட்டு பெரும் புகழுடன் விளங்கி வருகிறது.





# சாவி: ~~80~~ 30!



அனைவராலும் பெரிதும் மதிக்கப்படும் பத்திரிகை ஆசிரியர், எழுத்தாளர், நகைச்சுவையாளர் சாவி அவர்களுக்கு எண்பது வயது. அவரிடமிருந்து எண்பது சாவிகளைப் பெறுவதற்கு அணுகினோம். "நான் முப்பது வயது போல்தான் உணர்கிறேன்; அதனால் முப்பது யோசனைகள் வேண்டுமானால் தருகிறேன்" என்றார்.

1. உழைப்புக்கு வயசும் ஓய்வும் கிடையாது.

அமெரிக்காவில் நியுஜெர்ஸியில் ஒரு பெட்ரோல் பங்கில் ஒருவரைச் சந்தித்தேன். நான்கு இளைஞர்கள் செய்யும் வேலையை அவர் மட்டும் செய்கிறார். காருக்குக் கார் தாவி பெட்ரோல் போடுகிறார். குறைந்தபட்சம் ஒரு நாளைக்குப் பத்து மணி நேரம் வேலை செய்கிறார். இளமையின் ரகசியம் உழைப்பு மட்டும்தான் என்று உணர்த்திக் கொண்டிருக்கும் அவருக்கு வயது தொண்ணூறு! ரஷிய ராணுவ வீரரான அவர், இரண்டாம் உலகப் போரின் போது சைபீரியாவின் கடும் குளிரில் தனியாக அகப்பட்டுக் கொண்டார். ஏறத்தாழ ஒரு பர்லாங் தூரம் வெண்பனியில் படுத்தவாறே குழந்தை போல் தவழ்ந்து வந்ததன் விளைவாகக் கால்களை எடுத்து விட வேண்டும் என்ற நிலைக்கு ஆளானார். தெய்வாதீனமாக நல்ல சிகிச்சை பெற்று கை கால்களுடன் தப்பி இன்றும் சுறுசுறுப்பாக இயங்குகிறார்.

2. தினமும் எதையாவது கொஞ்சம் படித்து விட்டுத்தான் தூங்குவது என்று பழகிக் கொள்ளுங்கள். நானும் இனி பழகிக் கொள்கிறேன்.

3. டெலிபோனில் வளவளவென்று பேசாதீர்கள். சுருக்கமாக முக்கியமானதை, தவறாமல் சொல்லிவிடுங்கள்.

4. யாரையாவது பாராட்ட வேண்டுமென்று தோன்றினால் உடனே பாராட்டிவிடுங்கள். அதில் தாமதமோ கஞ்சத்தனமோ வேண்டாம். விரோதியாக இருந்தாலும் உரிய சந்தர்ப்பத்தில் பாராட்டியாக வேண்டும் என்பதைப் பின்பற்றுகிறவன் நான்.

5. வாழ்க்கையில் இனி பயப்படுவதற்கு ஒன்றுமில்லை என்ற உறுதி மனதில் ஏற்படும் நான்தான் நாம் பிறந்த நான்.

6. இந்தியாவின் ஜனத்தொகை தொண்ணூற்று மூன்று கோடி. 'நமக்கு உதவுவதற்கு யார் இருக்காங்க?' என்ற அச்சமே வேண்டாம். உதவிக்கு ஆட்கள் எப்படியும் கிடைப்பார்கள்.

7. தன்னிரக்கம் பைசாவுக்குப் பயனில்லாதது. அதற்கு நேரம் செலவிடலாகாது.

8. நேரம் தவறாமை அனைவருக்கும் முக்கியம். மாலை ஐந்தரை மணிக்கு ஒரு விழாவுக்கு ஸர் ஸி.பி. ராமசாமி அய்யர் செல்ல வேண்டும். எதிராஜ் கல்லூரிக்கு அருகிலுள்ள கிதா கஃபே கார்டனில் (இப்போது காஞ்சி) நடக்கும் அந்த விழாவிற்கு அவர் காரில் சென்ற போது நேரம் 5:25. டிரைவரை மீண்டும் ஒரு ரவுண்டு போகச் சொன்னார். 5:30 மணிக்குச் சரியாக வந்து இறங்கினார். பங்க்சுவாலிட்டி என்றால் அது தான்! லேட்டாகவும் போகக் கூடாது. அதே சமயம் முன்னாடியும் போய்விடக் கூடாது. இதற்கு விதிவிலக்கும் உண்டு. ரயில்வே ஸ்டேஷன், ஏர்போர்ட், ஆகிய இடங்களுக்குச் செல்லும் போது முன்னாடியே கிளம்பி எந்த டென்ஷனும் இல்லாமல் போய்ச் சேருங்கள்.

9. பள்ளிக்கூடத்துக்குப் போகிறவர்களை பெரியவர்கள், "இன்னிக்கு என்ன கத்துக்கிட்டீங்க?" என்று கேட்கிறார்கள். வேலைக்குப் புதிதாகப் போகிறவங்ககிட்டே, "என்ன சம்பாதிக்கிறே?" என்று கேட்கிறார்கள். இது தவறு.

வேலைக்குப் போகிறவங்களுக்குச் சம்பாதிக்கிறதை விட புதுசு புதுசா விஷயங்களை - டெக்னிக்குகளை கற்றுக் கொள்வதில்தான் ஆர்வம் இருக்க வேண்டும். பத்திரிகைத் தொழிலின் நுணுக்கங்களை நான் கற்றுக் கொள்வதில் ஆர்வம் கொண்டு, ஆரம்ப காலத்தில் சம்பளமே இல்லாமல், மத்தியானம் லஞ்ச்

சிற்கு இரண்டு தம்ளர் தண்ணீர் மட்டும் குடித்து விட்டு வேலையைத் தொடர்ந்திருக்கிறேன். வேலைக்குப் புதியதாகப் போகிறவர்களிடம், "என்ன புதுசா கற்றுக் கொண்டாய்?" என்று கேட்க, வீட்டில் இருக்கும் பெரியவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும்.

10. வீட்டில் உள்ள குப்பைகளைக் குப்பைத் தொட்டியில் மட்டுமே போடுங்கள். வீட்டையே குப்பைத் தொட்டியாக்கி விடாதீர்கள்.

11. கடன் வாங்க சாமர்த்தியம் இருந்தால் மட்டும் போதும். அதைவிட கடனை அடைக்க நேர்மையும், நாணயமும் வேண்டும். சாமர்த்தியத்தை விட நாணயம்தான் முக்கியம்.

12. கடுமையான சோகத்திலிருந்து நம்மை மீட்க யாராலும் முடியாது – நமது உறுதியைத் தவிர. என் வாழ்க்கையே இதற்கு உதாரணம்.

13. செலவாளிக்கு மணி பர்ஸ் தேவை இல்லை. இருப்பது நான்கு ரூபாய். செலவழிப்பதோ ஐந்து ரூபாய், அப்புறம் பர்ஸ் எதுக்கு?

14. வாழ்க்கையில் இருபது சதவீதமாவது ரிஸ்க் எடுக்க வேண்டும். வாழ்க்கையில் பெரும் வெற்றியும் புகழும் பெற்றவர்களைப் பாருங்கள். ஒரு கால கட்டத்தில் நிச்சயம் 'ரிஸ்க்' எடுத்துச் செயல்பட்டிருப்பார்கள். 'ரிஸ்க்' எடுத்துக் கொள்வது வெற்றிக்கு ஒரு பீடம் அமைப்பது போல். உயிரைப் பணயம் வைத்து, தண்ணீரில் மூழ்கித்தானே நீச்சல் கற்றுக் கொள்கிறோம்?

15. அன்று வந்த கடிதங்களுக்கு அன்றே பதில் போடுங்கள். இது ராஜாஜியிடம் நான் கற்றுக் கொண்டது. தேவையானதற்குப் பதில் போடுங்கள், மற்றவற்றைக் கிழித்துக் குப்பைக் கூடையில் போடுங்கள்.

"ஒருவர் நம்மைச் சந்திக்க நேரே வரும்போதோ, அல்லது டெலிபோனில் பேசும் போதோ, ஏதாவது கேட்டால், 'நாளைக்குப் பதில் சொல்கிறேன்' என்றா அவரிடம் சொல்வோம்?" என்பார் ராஜாஜி.

16. வாரப் பத்திரிகை நிருபர்கள் பேட்டியின் போது பெயர்கள், இடங்கள், தேதிகள் இவற்றை மட்டும் குறிப்பு எடுத்துக் கொண்டால் போதும். பேட்டி அளிப்பவர் ஒரு அனுபவத்தையோ நிகழ்ச்சியையோ வர்ணிக்கிறார் என்றால், அவற்றைக் குறிப்பு எடுக்காமல் மனதில் மட்டும் வாங்கிக் கொள்ளுங்கள். பேட்டிக் கட்டுரையை நீங்கள் எழுதும் போது, அந்த அனுபவங்களில் உங்கள் மனதில் எது நிற்கிறதோ அதை மட்டும் எழுதுங்கள். உங்கள் மனதில் நிற்காதது, ஆசிரியரிடமும் சரி, வாசகர்களிடமும் சரி, நிச்சயம் எடுபடாது.

17. அந்தஸ்துள்ளவர்களின் நட்பு நீடிக்க வேண்டுமானால் அவர்களிடம் உதவியோ, பதவியோ எதிர்பார்க்கக் கூடாது. 'அப்புறம் என்ன நட்பு வேண்டிக் கிடக்கு?' என்று சோர்வு வேண்டாம். நட்பு நட்புக்காகவே இருக்கட்டும். என் வாழ்க்கையில் எப்போதும் கடைப்பிடித்து வரும் நெறிகளில் இதுவும் ஒன்று.

18. மேஜை மீது கோப்புகள் குவிந்திருந்தால் 'பிஸி'யாக இருப்பதாக அர்த்தமல்ல. சோம்பல் என்றுதான் அதற்குப் பொருள்.

19. யாரைச் சந்திக்கப் போவதானாலும் 'திடுதிப்' பென்று போய் நிற்க வேண்டாம். டெலிபோனில் தெரிவித்து, சம்மதம் பெற்றுச் செல்வதே இருவருக்கும் நல்லது.

ஆனால் ஒரு நெருக்கடியில் திடீரென்று போய் நிற்கலாம். சின்ன அண்ணாமலையும் நானும் நெருங்கிய நண்பர்கள். அவர் தமிழ்ப் பண்ணை நடத்திக் கொண்டிருந்த காலம். தியாகராய நகரில், உஸ்மான் ரோடு நடைபாதையில் சில ஏழை, பாழைகள் காய்கறி வைத்து விற்றுக் கொண்டிருந்தார்கள். போலீஸாரால் அவர்களுக்கு அவ்வப்போது பெரிய தொல்லை. சின்ன அண்ணாமலையிடம் வந்து அவர்கள், "ஏதாவது உதவி பண்ணுங்க சாமி" என்று முறையிட்டார்கள். "இவர்களை காமராஜ் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போய் இவர்கள் கஷ்டத்தை எடுத்துச் சொல்லுங்கள்" என்று என்னை அனுப்பி வைத்தார் சின்ன அண்ணாமலை. அப்போது பகல் இரண்டு மணி. காமராஜ் தூங்கிக் கொண்டிருந்தார். "பார்க்க முடியாது" என்று சொல்லி விட்டார்கள். ஆண்களும் பெண்களுமாக இருபது பேர் என்னுடன். "நான் 'காமராஜுக்கு' என்று சொல்லுவேன். நீங்கள் 'ஜே' என்று குரல் கொடுங்கள்" என்றேன். 'காமராஜுக்கு ஜே' என்ற கோஷம் கேட்டதும் அடுத்த நிமிடமே காமராஜ் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்து, எங்களைப் பார்த்து "என்ன சமாசாரம்?" என்று கேட்டார். பிரச்னையைச்

• அமெரிக்காவில் துணைவியார் ஜானகியுடன் 'சாவி'.



சொன்னேன். சில கேள்விகளுக்கு விளக்கம் கொடுத்தேன். அப்போதே சத்தியமூர்த்தி என்ற சென்னை கார்ப்பரேஷன் உயர் அதிகாரியை டெலிபோனில் கூப்பிட்டு அவர்கள் அங்கேயே பகல் பார்க் ஓரமாக காய்கறிக் கடை நடத்த ஏற்பாடு செய்தார். எதற்குச் சொல்ல வந்தேன் என்றால் அவசரத்திற்கு 'தடால்' என்று போய் நிற்கலாம் என்பதற்கு ஓர் உதாரணமாகத்தான்.

20. உங்கள் வயதிற்குக் குறைந்தவர்கள் மத்தியில் பழகுங்கள். பல இளைஞர்களின் நெருக்கத்தால் எனக்கு வயது முப்பதுதான் என்றே உணர்கிறேன். ஐ ஃபீல் யங்! அவர்கள் பேசும் பேச்சு, நடை உடை பாவனைகள், விருப்பு வெறுப்புகள் எல்லாம் தெரிந்து கொள்கிறேன். என் வயசு ஆட்களோடு மட்டும் பழகிக் கொண்டிருந்தால் 'ரொம்ப நல்லா இருக்கு' என்பதற்கு 'தூள், டக்கர்' என்ற லேட்டஸ்ட் சொற்கள் என் கவனத்திற்கு வராமலே போய்விடுமே!

21. புதுமை எந்தத் துறையில் இருந்தாலும் ரசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். ஒரு சசின் டெண்டுல்கர், ஒரு ஏ.ஆர். ரஹ்மான், ஒரு புது எழுத்தாளர், பேச்சாளர், இசைக் கலைஞர் யாராக, எதுவாக இருந்தாலும்.

22. நகைச்சுவையாக எழுதுவது எப்படி? என்று என்னைப் பலர் கேட்கிறார்கள். ஒரு விஷயத்தை, நிகழ்ச்சியை சற்று வித்தியாசமான கோணத்தில் பார்ப்பதுதான் நகைச்சுவை. ஒரு சர்க்கஸில் சிங்கம் தன் கூண்டிலிருந்து தப்பி வெளியே வந்து விடுகிறது. எல்லோரும் உயிருக்குப் பயந்து ஓடுகிறார்கள். எங்கும் பரபரப்பு. ஒருவர் மட்டும் சட்டென்று போய், சிங்கத்தின் கூண்டிற்குள் சென்று தாளிட்டுக் கொள்கிறார். இந்த வித்தியாசமான அணுகுமுறைதான் நகைச்சுவை.

23. சரியான நேரத்தில் பதினைந்து பைசா செலவில் ஒரு போஸ்ட் கார்டு மூலம் செய்ய வேண்டிய வேலையைச் செய்யத் தவறும் போது, பின்னால் பதினைந்து ரூபாய் செலவில் எஸ்.டி.டி. கால் போட்டுப் பேச வேண்டியதாக இருக்கிறது.

24. பிரச்னைகள், தனக்குள்ளேயே தீர்வையும் கொண்டுள்ளன என்பது ரொம்ப பேருக்குத் தெரிவதில்லை. அதற்காக நரசிம்மராவ் மாதிரி எதற்கும் சும்மாவே இருக்கக் கூடாது – பிரச்னை தன்னால் தீர்ந்துவிடும் என்று. சில பிரச்னைகள் மட்டும் சிறிது நேரத்தில் தானே தீர்ந்து விடும் இயல்பு கொண்டவை. பிரச்னையின் தன்மை அறிந்து, அதற்கேற்ற வகையில் சிந்தித்து பிரச்னையைத் தீர்க்க வேண்டும். பிரச்னை தோன்று முன்னரே தவிர்ப்பது மேதைகளின் செயல்பாடு. தொலைநோக்கு என்பது இதுதான்.

25. உணவு விஷயத்தில் சபலம் உபத்திரவமே. தேவைக்கு மீறிய உணவை வயிற்றுக்குள்ளே எறிவதை விட, வெளியே எறிவது புத்திசாலித்தனம். நூறு வயது முழுமையாக வாழ்ந்த காஞ்சிப் பெரியவர், மொரார்ஜி தேசாய், மற்றும் கி.ஆ.பெ. விசுவநாதம், இவர்களைப் பார்த்து கற்றுக்கொள்ள வேண்டும்.

26. உங்களால் நிறுத்த முடியாதது எதையும் தொடங்காதீர்கள். என்னைப் பாருங்க, கட்டுபடி ஆகவில்லையென்று தெரிஞ்சதும் 'சாவி' பத்திரிகையை நிறுத்திட்டேன். பாடகர், பேச்சாளர் இவங்க எல்லாம் எப்போது நிறுத்தணும்கிறதை நல்லா தெரிஞ்சுக்கணும்.

27. குருவைக் கனவிலும் மறக்காதீர்கள். என் கனவில் அடிக்கடி வருபவர்கள் இரண்டு பேர். ஒருவர் கல்கி, மற்றொருவர் எஸ்.ஏ.பி.

28. வளவளவென்று ஒரு விஷயத்தை எழுதுவதாலோ ஏராளமான பக்கங்கள் எழுதுவதாலோ, ஒருவர் பெரிய எழுத்தாளரோ, திறமையான எழுத்தாளரோ அல்ல. சொல்ல வேண்டியதைத் தெளிவாக, சுருக்கமாக எழுதுவதே சிறப்பு. சுருக்கம்தான் சுவை. அதற்காக, 'கலைஞர்', 'கல்கி', சாண்டில்யன் போன்ற சரித்திரக் கதை ஆசிரியர்கள் மட்டும் நீளமாக எழுதலாமா?' என்று கேட்கக் கூடாது. அவர்கள் 'மயில்' மாதிரி. மயிலுக்குத் தோகை நீளமாக இருக்கலாம்; குரங்கிற்கு வால் நீளமாகக் கூடாது.

29. எஸ்.வி.வி., கல்கி ஆகியோரின் நகைச்சுவை எழுத்துக்களைப் படித்த பிறகுதான் நகைச்சுவை எழுத எனக்கு ஆர்வம் ஏற்பட்டது. நகைச்சுவை எழுத்தாளராக என்னை உருவாக்கியவர் கல்கிதான். எப்போதும் எந்த துக்கத்திலும் துன்பத்திலும் கூட நகைச்சுவையை என்னால் ரசிக்க முடிகிறது. புலி துரத்தி வர, பாழுங்கிணற்றில் விழுந்தவன், மரத்தின் இடையே வேரைப் பற்றிக் கொண்டு உயிர் தப்பிக்க நினைக்கிறான். அவன் கூட, கீழே காத்திருக்கும் பாம்பையும், மேலே உள்ள புலியையும் மறந்து அந்த மரத்தில் உள்ள தேன் கூட்டிலிருந்து சொட்டுகிற ஒரு துளி தேனை ருசிக்க நாக்கை நீட்டுகிறான். அதைப் போல் எந்த நெருக்கடியிலும், சோகத்திலும் கூட நகைச்சுவையை அனுபவித்து, ரசிக்கும் மனப்பக்குவம் வேண்டும்.

30. முன் கோபத்தால் நஷ்டமே தவிர லாபம் துளியும் கிடையாது. (இந்த புத்திமதியை எனக்கு நானே சொல்லிக் கொள்கிறேன்!)

பேட்டி : **எஸ். ரஜத்**

# மத்திய அரசு நழுவக் கூடாது!

♦ 'நல்ல மனைவியாக இருப்பது எப்படி?' கவர் ஸ்டோரி அருமையாக இருந்தது. மணமான பெண்களுக்கும் இனி மணமாகக் காத்திருக்கும் பெண்களுக்கும் பயன் அளிக்கும் வண்ணம் அமைந்திருந்தது.
மன்னார்குடி, எம். ரேவதி.

♦ நல்ல கணவனாக நடந்து கொள்வது எப்படி என்பதற்கு வழிமுறைகள் கூறியது போல், நல்ல மனைவியாக இருப்பது எப்படி என்பதற்கும் டிப்ஸ் கொடுத்து, கணவன் – மனைவியிடத்து சண்டை சச்சரவு இல்லாமல் ஒற்றுமையாகக் குடும்பம் நடத்த வழி காட்டியதற்கு, நானும் என் மனைவியும் நன்றியை ஒற்றுமையாகத் தெரிவித்துக் கொள்கிறோம்.
விழுப்புரம் -2,
பத்மாவதி, வெங்கடேசன்.

♦ அமரர் சந்தானத்தின் அருமை பெருமைகளை அலசி ஆராய்ந்து எழுதப்பட்ட அருமையான தலையங்கத்தைப் பாராட்ட வார்த்தைகளே இல்லை. அதே சமயம் சட்டங்கள் போட்டுக் கொண்டே போவதனால் பயன் இல்லை. 'நல்ல முறையில் பயன்படுத்தப்படாத வரை' என்பதையும் சற்று ஆணித்தரமாகக் கூறியிருக்கலாம். ஏனெனில் எத்தனை சட்டங்கள் இருந்தால் என்ன, 'திருடனாய்ப் பார்த்து திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்க முடியாது' என்ற பட்டுக்கோட்டையாரின் வார்த்தைகள் அமர வார்த்தைகள் அல்லவா!
திருப்பரங்குன்றம்,
டி.கே. சுப்பிரமணியன்.

♦ 'மாண்புமிகு கம்சன்' தில் கதை போலும் என்று படிக்க ஆரம்பித்த சமயத்தில், சமூகப் பிரச்னையைக் கலந்து, குடும்பப் பிரச்னையையும் சரி விகிதத்தில் 'டச்' செய்தாரே, அதற்குக் கண்டிப்பாய் வாசனைப் பாராட்டியே ஆக வேண்டும்.
காட்பாடி,
அ. சோ. விஸ்வநாதன்.

♦ ஷெர்லாக்ஹோம்சின் துப்பறியும் நாவல் ஒன்றை படித்த திருப்தியை ஏற்படச் செய்திட்டார், வாசன். பாராட்டுக்கள்.
விசலூர் – 1, ஜி. ஜி. கிருஷ்ணன்.

♦ நா. நாகராஜனின் 'தொடரும் உறவுகள்' சிறுகதை யதார்த்தமாக இருந்தது என்றால், ரிஷபனின் 'நேசம் மறப்பதில்லை நெஞ்சம்...' சிறுகதை நெஞ்சை நெகிழ வைத்து விட்டது.
சிவகங்கை, ப. இராம் முருகன்.

♦ 'பணம் பண்ணலாம் வாங்க!' தொடர் என்னைப் போன்ற செலவாளிகளுக்கு, சேமிப்பின் அவசியத்தை மிக எளிமையான முறையில் எடுத்துக் கூறியது. இத் தொடர் இவ்வளவு சீக்கிரம் முடிவு பெறும் என்று நான் எதிர்பார்க்கவில்லை.
தஞ்சாவூர் – 5, வனிதா ரவி.

♦ தராசு பதிலில் சோகமான நிகழ்ச்சியாக திருச்சி ஆஸ்பத்திரியின் விபரீத நிலைமையைக் கூறி நெஞ்சைச் சுட்டாலும், இன்னும் திருச்சி அரசு ஆஸ்பத்திரியை வார்டு வார்டாக சுற்றிப் பார்த்தால், நோயாளிகளைப் பார்க்கச் செல்பவர்களும் நோயாளியாகி விடுவார்கள்; அத்தனை அசுத்தம். கூடவே லஞ்சம். இந்த திருச்சி அரசு ஆஸ்பத்திரியின் கேடான நிலையை எழுத ஒரு இதழ் போதாது!
திருச்சி – 3, எச். சபிதாநேசன்.

♦ "காவிரிப் பிரச்னையில் யாரையும் நிர்ப்பந்திக்க முடியாது. மாநிலங்களின் பட்டியலில் பாசனம் வருவதால் இப் பிரச்னையில் நிர்ப்பந்திக்க முடியாது" என மத்திய மந்திரி சுக்லா கூறியுள்ளார். நடுவர் மன்றத்தின் தீர்ப்பைக் கூட (இடைக்கால) நிறைவேற்ற மறுக்கும் ஒரு மாநிலத்தை நிர்ப்பந்திக்க இயலாது என்றால் பஞ்சாயத்து ராஜ் சட்டமியற்றி, அதை நிறைவேற்றும்படி மாநிலங்களை மத்திய அரசு நிர்ப்பந்திப்பது எப்படி? மத்திய அரசு வோட்டுக்காக தன் பொறுப்பிலிருந்து நழுவப் பார்ப்பது கேவலமானதாகும்.
தஞ்சாவூர், வி. கே. பிள்ளை.

## ரூ. 20 பரிசு பெறும் கடிதம்

♦ நடக்கும் 'ரெய்டுகள்' எப்படியிருப்பினும் தேர்தல் நேரத்தில் பணத்தை வாரியிறைத்தால் ஆட்சியைப் பிடித்து விடலாம். தற்காலத்தில் இது உண்மையாகியும் வருவதுதான் வேதனை. பணம் தான் மனிதர்கள் மத்தியில் பிரதானமாகி விட்டது என்பது கவலை தருகிறது. எத்தனை விசாரணை கமிஷன்கள் அமைக்கப்பட்டாலும் மறுபடி ஆட்சியைப் பிடித்து விட்டால் விசாரணையாவது, கமிஷனாவது? எல்லாம் குப்பைத் தொட்டிக்குத்தான்! இதுதான் நடைமுறை என்பது எத்தனை அவலமானது!
அரசரடி, வி. சிவா.

# எதிர்க்கட்சிகளைக் கலங்கடிக்கும் ரஜினி!

**ரஜினிகாந்த் அரசியலில் குதித்தால் எதிர்க்கட்சிகளின் நிலை என்ன? எப்படிப்பட்ட கூட்டணிகள் உருவாகும்? அலசுகிறது கட்டுரை....**

தமிழ்நாட்டிலுள்ள எதிர்க்கட்சிகளிடம் இப்போது ஒரு பதற்றம் தெரிகிறது. காரணம் : ரஜினிகாந்த்!

கடந்த மூன்று நான்கு வருடங்களாக, ஜெயலலிதா அரசுக்கு எதிராகப் பிரசாரம் செய்து, மக்களின் உணர்வுகளை அரசுக்கு எதிராக மாற்றி வைத்திருக்கின்றன எதிர்க்கட்சிகள். அந்த உணர்வுகள் வோட்டுக்களாக மாற வேண்டிய நிலையில், அறுவடை செய்ய ரஜினிகாந்த் வந்து விடுவாரோ என்கிற பதற்றம்!

1971-ல், காமராஜரும் ராஜாஜியும் அப்போதைய, கலைஞர் தலைமையிலான தி.மு.க. ஆட்சிக்கு எதி

ராக மக்க
தி.மு.க. செ
யான போ
திலேயே ப
ஆட்சிக்கு
பதை நன்





ஒருமுகப்படுத்தி வந்தார்கள். 71 தேர்தலில் ...ாலும், ஒவ்வொரு தொகுதியிலும் கடுமை நிலவியது. குறைந்த வோட்டு வித்தியாசத் ...தாகுதிகளில் தி.மு.க. வெற்றி பெற முடிந்தது. ... விட்டாலும் தி.மு.க.வுக்கு எதிர்ப்பு இருப் ...ணர்ந்து, அதைச் சரியான முறையில் பயன் ...டுத்திக் கொண்டார், 72-ல் கட்சி துவங்கிய எம்.ஜி.ஆர்.

அப்போது இருகரம் நீட்டி அவரை வரவேற்றது இந்திரா தலைமையிலிருந்த காங்கிரஸ்!

ஆனால் ரஜினி காந்த் எம்.ஜி.ஆரா? அரசியல் கட்சி துவங்குவாரா? யாரோடு கூட்டுச் சேர்வார்? கொஞ்சம் கஷ்டமான கேள்விகள்தான்!

காலை ஆறு மணியிலிருந்தே போயஸ் தோட்டத்திலுள்ள ரஜினி வீட்டுக்கு ரசிகர்கள் பட்டாளம் குவிய ஆரம்பித்து விடுகிறது. ஓடுகிற பாம்பைக் கையிலே பிடிக்கும் இளைஞர்கள். முதல்வரைப் பற்றிக் கேட்டால் வாயிலிருந்து 120 டிகிரி பாரன்ஹீட் வெளிப்படுகிறது!

"துணிந்து கட்சி ஆரம்பிக்க வேண்டும்!" என்று சொல்கிறார் நாமக்கலிலிருந்து வந்திருக்கும் சண்முகசுந்தரம்.

அப்படித் துணிந்து இவரும் எம்.ஜி.ஆர். மாதிரி ஆரம்



• சர்ச்சைக்குக் காரணமான பாட்ஷா விழாவில்....

பிக்க முடியுமா? எம்.ஜி.ஆர். ஏற்படுத்தி வைத்திருந்த இமேஜுக்கும் ரஜினியின் இமேஜுக்கும் ஆறு வித்தியாசங்களுக்கு மேலேயே இருக்கின்றன. அதில் முதலாவதும் முக்கியமானதும் என்னவென்றால் 'நல்லவர்; பெண்களைக் காப்பாற்றுபவர்' என்ற அங்கீகாரம் பெற்றிருந்தார் எம்.ஜி.ஆர்.

ஆனால் ரஜினி அப்படிப்பட்ட இமேஜைப் பெற்றிருக்கிறார் என்று சொல்ல முடியாது. ரஜினியின் ரசிகர் பட்டாளத்தில் தாய்க்குலத்தின் பங்கும் மிக மிகக் குறைவே. இன்னமும் சொல்ல வேண்டுமென்றால் வோட்டு போடுவதற்குத் தகுதியில்லாத வயதில் உள்ளவர்கள்தான் ரஜினியின் ரசிகர்களில் கணிசமானவர்கள்.

ஆனால், இந்தச் சூழ்நிலையிலும், ஆளும் கட்சியும் சரி, எதிர்க்கட்சிகளும் சரி, 'ரஜினி என்ன செய்வாரோ?' என்கிற குழப்பத்தில்தான் மூழ்கியுள்ளன!

தமிழ்நாட்டின் தற்போதைய அரசியல் நிலவரம் நீடித்தால், தேர்தலின் போது நான்கு அணிகள் உருவாவதற்கான சாத்தியங்கள் பிரகாசமாக இருக்கின்றன. தி.மு.க. – வாழப்பாடி, பா.ம.க. ஓர் அணி; ம.தி.மு.க. – இ.கம்.யூ. ஓரணி; அ.தி.மு.க. ஓரணி. காங்கிரஸ், திருநாவுக்கரசு, உதிரிக் கட்சிகள் ஓரணி. ரஜினி எந்த அணி என்பதே எதிர்பார்ப்பு!

நாட்டு நடப்பைப் பற்றி ரஜினி விமர்சித்ததை எல்லா எதிர்க்கட்சித் தலைவர்களும் வரவேற்றார்கள். 'அதில் என்ன தப்பு' என்று கேட்டார்கள். ஆனால் ரஜினியின் அரசியல் பிரவேசத்துக்குச் சிவப்புக் கம்பளம் விரிப்பார்களா? எஸ்.ஆர்.பி. தம் பங்குக்கு, ரஜினி அரசியலில் குதிக்க வேண்டும் என்று முந்திக் கொள்ளக் காரணம், இப்போதிருக்கும் கூட்டணிகளிலேயே பலவீனமாக இருப்பது காங்கிரஸ் அணிதான். அவர்களுக்குத் தேர்தலின் போது கூட்டத்தைத் திரட்ட ஆள் தேவை. மேலிடம் அ.தி.மு.க.வுடன் கூட்டுச் சேர நிர்ப்பந்தப்படுத்தினால் அது பொருந்தாக் கூட்டணியாகத்தான் இருக்கும் என்பது தமிழக காங்கிரஸ் தலைவர்களின் கணிப்பு. ஏனென்றால் ஆற்றைப் பாதி கடந்தாகி விட்டது. இனி திரும்ப கரைக்குப் போக முடியாது. அடுத்த கரையை அடைந்தே தீர வேண்டும்.

ரஜினி விவகாரத்தால் ம.தி.மு.க.வும் கொஞ்சம் ஆடித்தான் போயிருக்கிறது. காரணம், கோபால்சாமிக்கும் ரஜினிக்கும் பொதுவாக உள்ள இளைஞர்கள் ஆதரவு. இதனால் துவக்கக் கட்டத்திலேயே இந்த இருவருக்கும் 'நல்ல உறவு' இருக்கிறது என்கிற தொனியை வெளிப்படுத்துகிற மாதிரி செய்திகள் விதைக்கப்பட்டன. அதில் ஒன்றுதான் கோபால்சாமி – ரஜினி டெலிபோன் பேச்சு. (ரஜினி வட்டாரத்தில் இந்தச் செய்தி மறுக்கப்படுகிறது!)

ம.தி.மு.க.விலுள்ள இளைஞர்களில் நாற்பது சதவிகிதம் பேர் இயல்பாகவே ரஜினி ரசிகர்களாக இருப்பதாகத்தான் அந்தக் கட்சியின் பிரமுகர்களே சொல்கிறார்கள். ரஜினி தனிக்கட்சி துவங்கினால் தங்களுக்குப் பெரிய பாதிப்பு வரும் என்றும் நினைக்கிறார்கள்.

தி.மு.க.வைப் பொறுத்தவரை எந்தவித ரியாக்ஷனும் இல்லாமல் இருக்கிறது. கலைஞர் தம் ராஜதந்திரத்தால், வாழப்பாடியையும், மூப்பனாரையும் இரண்டு பக்கத்திலும் வைத்துக் கொள்ள முயன்று வரும் வேளையில், ரஜினியைப் பற்றி பெரிதாக தி.மு.க.வினர் அலட்டிக் கொள்ளவில்லை. "தனிக் கட்சி துவங்குமளவுக்கு ரஜினி தைரியத்துடன் செயல்படுவாரா?" என்று அவர்கள் ஆச்சர்யத்துடன் கேட்கிறார்கள்.

தி.மு.க.வுடன் மிகவும் நெருக்கமாக உள்ள பா.ம.க. தலைவர் டாக்டர் ராமதாஸ் "கன்னடத்துக்காரரான ரஜினி, தமிழக அரசியலில் நுழைய அனுமதிக்க முடியாது" என்று குரல் கொடுத்திருக்கிறார்!

ஆனால் மக்கள் ஆதரவு ஒருவருக்குப் பலமாக இருந்தால் இதுபோன்ற குறுகிய, பிராந்திய வாதங்கள் அடிபட்டுப் போகும் என்பதற்கு எம்.ஜி.ஆர். ஒரு நல்ல உதாரணம்.

ரஜினியின் அரசியல் பிரவேசத்தால் சந்தோஷப்படும் நிலையிலிருப்பது, ஆளும் கட்சிதான். "எதிர்ப்பு வோட்டுக்கள் பிரிந்தால் எங்களுக்குக் கொண்டாட்டம்தான்!" என்கிறார் ஒன்றியப் பிரமுகர் ஒருவர்.

ஆனால் காங்கிரஸ் கட்சியின் மேலிடத்தில் ரஜினி – வீரப்பன் இருவரையும் ஓரணியில் நிறுத்தி, கூட்டு வைத்துக் கொள்வதில் ஆர்வமாக இருக்கிறார்களாம்.

மத்திய அரசு, வரும் மாதங்களில் இன்னமும் பல சங்கடங்களை ஜெயலலிதாவுக்குக் கொடுத்து, கடைசியில் ஊழல் புகார்களைச் சொல்லி வீரப்பன் மூலம் கட்சியை உடைக்கலாம் என்றும் சிலர் அபிப்ராயப்படுகிறார்கள்.

அதே நேரத்தில், ஜெயலலிதா காங்கிரஸ் தம்மை விட்டு தூரச் சென்று விடாதபடி தமது ஆட்கள் மூலம் காய்களை நகர்த்திக் கொண்டிருக்கிறார் என்றும் சொல்லப்படுகிறது.

ரஜினி – வீரப்பன் தலைமையிலான கட்சியுடன் காங்கிரஸ் என்பது ஒரு பலமான கூட்டணியாகத்தான் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. இந்த கூட்டு ஏற்படக் கூடாது என்பதில் தி.மு.க.வும் அ.இ.அ.தி.மு.க.வும் தீவிரமாக இருக்கின்றன.

திரைமறைவில் பல நடவடிக்கைகள் தொடர்கின்றன. ஆனால் ரஜினிக்கும் வீரப்பனுக்கும் அந்த அளவுக்குத் தைரியம் இருக்குமா என்பதுதான் இன்னமும் கேள்விக்குறியாக இருக்கிறது!

காரணம்?

இருபது வருடங்களாக நடித்துக் கொண்டிருக்கும் ரஜினி தம் உச்சநிலையைத் தக்க வைத்துக் கொள்வதில் உஷாராக இருக்கிறார். வருடத்துக்கு ஓரிரு படங்களை மட்டும் வெளியிடுவதன் மூலம் ரசிகர்களை ஏங்க வைக்கிறார். என்றாலும் வயதாகிக் கொண்டே வருவதால் ஒரு முடிவெடுக்கும் நிலைக்கு விரைவில் தள்ளப்படுவார் என்று ரஜினிக்கு நெருங்கியவர்கள் சொல்கிறார்கள்.

எனினும் அரசியல் என்பது ஜெயலலிதா போன்ற சிலருக்குத்தான் ராஜபாட்டையாக இருக்கிறது. மற்றவர்களுக்கோ அது குண்டும், குழியும் நிறைந்த மெட்ராஸ் பாதை. அந்தப் பாதையில்தான் நடக்க வேண்டுமென்பது ரஜினிக்கும் தெரியாததல்ல!

— ப்ரியன்

படங்கள் : யோகா

● **ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.**

*? தமிழகத்தில் மாற்றுக் கருத்துக்களை வெளியிட முடியாத சூழ்நிலை நிலவி வருவதாகக் கருணாநிதி குற்றம் சாட்டுகிறாரே?*

! நேற்று 356 ஒழிக்கப்பட வேண்டும் என்று குரல் கொடுத்தவர், இன்று அதையே பயன்படுத்தி ஆட்சியைக் கலைக்க வேண்டும் என்று பேசியிருக்கிறாரே... ஆக, மாற்றுக் கருத்து வெளியிட முடிகிறதோ இல்லையோ, மாற்றிக் கொண்ட கருத்துக்களை வெளியிட முடிகிறது!

● **எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.**

*? தமிழ்ப் படங்களில் மிதமிஞ்சிய வன்முறைக் காட்சிகள் பெருகி வருகின்றன என்று வருத்தப்படும் ஜெயலலிதா...?*

! தாம் 'ஜெ' பக்கம் என்று ரஜினி மட்டும் அறிவிக்கட்டும்... அடுத்த கணமே, 'சினிமா வன்முறை சமுதாயத்தைப் பாதிப்பதில்லை; சமுதாயத்தைப் பிரதிபலிப்பதுதான்...' என்று வாதாடுவார்.

● **ஜி. மாஜினி, செங்குன்றம்.**

*? சமீபத்தில் நெகிழ்ந்த விஷயம் எது?*

! ஸ்டெஃபியின் ஆதரவாளரால் முதுகில் குத்தப்பட்ட மோனிகா செலஸ், திரும்பவும் டென்னிஸ் கோர்ட்டுக்கு வந்தது... காயம் ஆறி உடல் தகுதி பெற்றது பெரிய விஷயமில்லை; மனம் அச்சத்தை விரட்டி, உற்சாகம் பெற்றதுதான் ஆச்சரியம். வாழ்த்துக்கள்!

● **வி. மோகன், நெல்லிக்குப்பம்.**

*? பார்த்தீர்களா, செப்டெம்பர் ஏழுக்குப் பிரும்மம்மாண்ட பந்தலை?*

! அதைப் பற்றிய வாய்ப்பந்தல் அதைவிடப் பெரியதாக இருக்கே!

● **எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.**

*? வருகிற பொதுத் தேர்தலில் நடராஜன், சசிகலா, தினகரன், சுதாகரன், சந்தன வீரப்பன், பிரேமானந்தா ஆகியோர் போட்டியிட்டால் வெற்றி பெறுவார்களா?*

! இவர்களை யார் நிறுத்தி வைக்கிறார்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது. ஒரு தலைவருக்காக, அவர் கட்சி சின்னத்தில் நமது மக்கள் வோட்டுப் போடுகிறார்களேயொழிய, வேட்பாளரின் தராதரம் ஆராய்ந்து செயல்படுவதில்லை. இதுதானே நம் நாட்டின் மிகப் பெரிய சோகம்!

# பார்த்தீர்களா, பிரும்மாண்ட பந்தலை?

• இவர்கள்...



• ...தேர்தலில்...



• ...நின்றால்....



● **கவி இளங்கதிரவன், கோவை – 11.**

*? மத்திய அரசின் தற்போதைய குறிக்கோள் எது?*

! முழுசாக இன்னும் ஒரு வருஷம்.

● **வசந்தா காந்த், கருப்பம்புலம்.**

*? இன்று யாரைப் பார்த்து, 'ஐயோ பாவம்!' என்று சொல்லலாம்? (தவிர்க்க ஆர்.எம்.வீ...)*

! 'தப்புப் பண்ணியிருக்காங்க சரி. அதுக்காக பாவம்! ஒரு பெண் பிள்ளையைச் சுற்றி இத்தனை பேர் வியூகம் அமைத்துத் தாக்கறீங்களே!' என்று ரொம்பப் பேர் 'ஜெ'க்காக அனுதாபம் தெரிவித்திருக்கிறார்கள். ❑



• மயிலிறகு டியூன்கள்!



• ஆச்சர்யத்தை விட்டு...

● சு. கந்தையா, தக்கலை.

*? சந்திரசேகர் மீண்டும் பிரதமர் ஆவதற்கு முப்பத்தைந்து லட்ச ரூபாய் செலவில் யாகம் நடத்துள்ளதே...?*

! யாகம் பண்ணி என்ன...? அதற்கெல்லாம் யோகம் வேணும் அய்யா!

● டி. பகபதி, ஊஞ்சவேலாம்பட்டி.

*? ஏ.ஆர். ரஹ்மான் முதன் முதலாக ஹிந்தியில் இசையமைத்துள்ள 'ரங்கீலா' படப் பாடல்களைக் கேட்டீர்களா?*

! ஆஹா! எலக்ட்ரானிக் வாத்தியங்களுடன் கடம் போன்ற லோக்கல் கருவிகளையும் இணைத்து, வருடும் மயிலிறகு டியூன்கள்... காதுகளுக்குத் தேன். ஹிந்தியாய் இருந்தால் என்ன... இசை கிறுகிறுக்க வைக்கிறதே!

● எஸ். குருசாமி, சென்னை - 44.

*? முதல்வருக்காக வாங்கப்பட்ட ஹெலிகாப்டரில் எட்டு இருக்கைகளே உள்ளன என்று சொல்லப்படுகிறது... ராசி எண் ஒன்பதாச்சே...?*

! பைலட் சீட்டைச் சேர்த்துக் கொள்ளுங்கள்!

● பானை பகம்பொன், நெல்லை - 11.

*? பாட்ஷா பட விழாவில் அதன் இயக்குனருக்கு அழைப்பு இல்லையாமே?*

! 'சில்லறை' விஷயம் சின்னத்தனத்தில் முடிந்திருக்கிறது! 'பாட்ஷா' அதற்குக் கண்டனம் தெரிவிக்காததுதான் நெருடல்.

● நெல்லை வி. சிவா, மதுரை - 16.

*? தம்மை நெல்சன் மண்டேலாவுடன் ஒப்பிட்டுள்ள நடராஜனின் செய்கை...?*

! இருவருக்குமே மனைவியினால் பிரச்னை என்ற ஒற்றுமைக்காக மட்டும் ஏற்கலாம்!

● கானா கணேசன், பொறையாறு.

*? 'அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்' என்பதை இன்றைய அரசியல்வாதிகளிடம் சொன்னால்...?*

! எமனுக்கும் ஒரு விலை உண்டு என்று பதில் சொல்வார்கள்!

● ஹேமா சுகுமார், வெண்டையம்பட்டி.

*? மாமியாரிடம் மருமகள் எப்படி நடந்து நல்ல பெயர் எடுக்கலாம்?*

! தமிழக அமைச்சர்களை முன்மாதிரியாகக் கொள்வதன் மூலம்...!

● கைலாசம், சென்னை - 92.

*? தெரியாமல்தான் கேட்கிறேன். வாரம் தவறாமல் சந்தியா மகளைக் குறைகூறி வருகிறீர்களே. இதற்கு முன் நடந்த ஆட்சிகளில் - திருவாரூரார் ஆட்சியில் - ஊழலே இல்லையா?*

! உங்களுக்குத் தெரியாததால் சொல்கிறேன். எந்த ஆட்சியின் போதும் கல்கி தட்டிக் கேட்கத் தயங்கியதுமில்லை; கண்மூடித்தனமாக ஆதரவு தந்ததுமில்லை. பழைய கல்கி இதழ்களைப் புரட்டிப் பார்த்தால் புரியும்.

● எம். ரேவதி, மன்னார்குடி.

*? சமீபத்தில் தாங்கள் ரசித்துப் படித்த புத்தகம்?*

! ஆலடி அருணா எழுதிய 'இந்திய அரசியலமைப்பும் கூட்டாட்சியும்' என்ற புத்தகம். கூட்டாட்சித் தத்துவத்தின் அடிப்படை பலமாக இருக்க வேண்டுமானால், மாநில அரசுகளுக்கான அதிகாரங்கள் அதிகப்படுத்தப்பட வேண்டியதன் அவசியத்தைத் தமது கருத்தாகச் சொல்வதுடன், அப்போதைய அரசியல் நிர்ணயச் சட்டக்குழு நடத்திய விவாதங்களிலேயே வலியுறுத்தப்பட்ட கருத்து அது என்பதையும் எடுத்துக் காட்டியிருக்கிறார். இளையதலைமுறையினர் அவசியம் படிக்க வேண்டிய புத்தகம். (மதிவாணன் வெளியீடு, 4, 13வது குறுக்குத் தெரு, சாஸ்திரி நகர், சென்னை - 20. விலை ரூ. 100/-)

● சி. ராஜேந்திரன், சின்னசேலம்.

*? "அன்றும் இன்றும் நான் காரில் போகும் போது புத்துணர்ச்சி தரும் எம்.ஜி.ஆர். படப் பாடல்களைக் கேட்டுக் கொண்டே தான் செல்வேன்" என்று வை.கோ. சொல்லியிருக்கிறாரே...?*

! 'நான் ஆணையிட்டால், அது நடந்து விட்டால்...' கேட்கும் போது எந்த அரசியல் தலைவருக்கும் புத்துணர்ச்சி என்ன... 'கிக்குணர்ச்சி'யே வந்து விடும்!



• காரில் போகும் போது...



• படிக்க வேண்டிய புத்தகம்

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எஸ். ராமசுப்பிரமணியன்,
40, பீச் ரோடு,
தூத்துக்குடி - 608 001.

# அவளோடு மட்டும் பேசாதே...

"இங்க உட்காருங்க... உங்களுக்கு குளிர் காத்து ஒத்துக்காது..."

பேருந்து தஞ்சாவூரிலிருந்து புறப்படும்போதே சொன்னாள். அவன் கேட்கவில்லை. இறுகிய முகத்துடன் ஜன்னல் வழியே வெளியே வெறிக்கத் தொடங்கியவன், இவள் பக்கம் திரும்பவே இல்லை. இது கூட ஒருவிதமான தண்டனைதான். அவனை வருத்திக் கொண்டு அவளை கஷ்டப்படுத்தும் தண்டனை.

காரணம் சாவித்திரிக்குப் புரிந்தது. ஆனால்...?

திருமணமான இந்த ஒரு வருடத்தில் ரகுராமனிடம் சாவித்திரி இப்படிப்பட்ட கோபத்தை பார்த்ததில்லை. பிடிக்கவில்லையென்றால் முகம் சுழிப்பானே தவிர கோபப்பட மாட்டான். இதுவரை இரண்டு முறை முகம் சுழித்திருக்கிறான். தவறு உணர்ந்து, சாவித்திரியின் முகம் மாறுவது புரிந்து இரவே முகம் சுழித்தமைக்கு மன்னிப்புக் கேட்டிருக்கிறான்.

முகத்தைக் கைகளில் ஏந்தி, "ஸாரிம்மா..." என்றிருக்கிறான்.

ஆனால் இப்போது செய்த தவறுக்கு... அவள் மேல் பொங்கிய கோபத்துக்கு மன்னிப்பு கேட்பானா...?

மாட்டான் என்றே தோன்றியது.

சாவித்ரிக்கு கல்யாணத்தில் கலந்து கொள்ள அவ்வளவாக விருப்பம் இல்லை. அவள் வர வேண்டிய அவசியமும் இல்லை. தூரத்து உறவு. வந்தது ஜாலிக்காக. மகிழ்ச்சிக்காக. விரையும் பேருந்தில் நெருக்கமாகக் கணவனோடு அமர்ந்து, அவன் கைகளைப் பற்றிக் கொண்டு, தோளில் முகம் சாய்த்து கிசுகிசுப்பாய் பேசுவதற்காக. அவன் அடிக்கும் ஜோக்குகளுக்கு சிரிப்பதற்காக.

சென்ற மாதம் அதிகாலையில் சிதம்பரம் சென்ற போது தூக்கம் தாங்க மாட்டாமல் தோளில் சரிந்து சரிந்து விழுந்தவனை இழுத்து மடியில் படுக்க வைத்துக் கொண்டாள். ரகுராமன் மனைவியின் மடியில் சுருண்டு படுத்துக் கொண்டான்.

பேருந்தில் இருந்த மொத்தத் தலைகளும் அவர்களையே வெறிக்க... சாவித்திரிக்கு அழகான, அன்பான கணவன் குழந்தை போல் சுருண்டு மடியில் படுத்துத் தூங்குவது உள்ளுக்குள் புளகாங்கிதத்தை ஏற்படுத்தியது. பெருமையாக இருந்தது. மனசு முழுதும் மகிழ்ச்சியில் தத்தளித்தது.

இந்தச் சின்ன, ஆனால் மாபெரும் மகிழ்ச்சிக்காகத்தான் கல்யாணத்துக்கு - தஞ்சாவூருக்கு வந்தாள்.

மகிழ்ச்சிக்குப் பதில் வேதனை. சோகம். இப்படி இறுக்கமாக முகம் வைத்த புருஷனை இதுவரை அவள் பார்த்ததில்லை. பார்த்ததெல்லாம் சிரித்த முகமானவன். 'சாவி... சாவி' என்று நிமிடத்திற்கு நூறு தடவை அன்பொழுக அழைக்கின்றவன். அம்சமாக வாய்த்து விட்ட கணவனை நினைத்து நினைத்து சந்தோஷப்பட்டு... அம்மாவிடமும் தங்கையிடமும் புருஷனின் பெருமையை... குடித்தனம் நடத்தும் அழகைச் சொல்லி சொல்லி மாய்ந்து.. தோழி உமாவுக்கு விளக்கமாய்க் கடிதம் எழுதி...

என் கண்ணே பட்டு விட்டதோ...? என் திருஷ்டியே என் சந்தோஷத்திற்கு இடையூறாகி விட்டதோ...?

அவ்வளவுதானா...? இனி என்னோடு பேசவே மாட்டாரா...? இருவருக்கும்

இடையில் இடைவெளி விழுந்து விடுமோ...?

சாவித்ரிக்கு அழுகை பொங்கியது.



வீட்டை விட்டுக் கிளம்பும் போதே அறைக்குள் வைத்துச் சொன்னான். ஏற்கெனவே முதலிரவில் கலங்கிய கண்களோடு சொன்ன அதே வார்த்தைகள்.

"கல்யாணத்துக்கு அவ வந்திருப்பா..."

"எவ...?"

"அதான்... அவ.. சரோஜினி..."

"ம்... புரியுது.. சொல்லுங்க..."

"நேருக்கு நேர் பார்த்தாலும் பேசிடாதே..."

"சரிங்க.. பேசலை..."

"ஒனக்கும் அவ சொந்தம்தான். இருந்தும் வேணாம். அந்தக் குடும்பத்தோட உறவோ... சகவாசமோ நமக்கு வேணாம்..."

"சரிங்க..." என்றவள் முகம் இறுகி அமர்ந்திருந்த கணவனை வியப்பால் பார்த்தாள். முதலிரவில் அவன் சொன்ன – முதன் முதலில் அவன் பேசிய வார்த்தைகள் நினைவில் ஓடின.

"சரோஜினியை தெரியுமா ஒனக்கு...?"

"உங்க அத்தை பொண்ணுதானே... தெரியுமே.."

"எப்படித் தெரியும்...?"

"எங்களுக்கும் சொந்தம்தானுங்க..."

மௌனமாக இருந்தான்.

"என்னவோ சொல்ல வந்தீங்க... நிறுத்திட்டீங்க..."

"ஒன்கிட்ட சொல்லலாமா...? ஃபர்ஸ்ட் நைட்டுல இது தேவையான்னு யோசிக்கிறேன்..."

"ஒங்க இஷ்டம்..."

"சரி சொல்லிடறேன். நானே ஒன்கிட்ட சொன்னதா இருக்கட்டும். பிறகு யாராச்சும் சொல்லி... என் மேல வருத்தம் வரக் கூடாதுல்ல... சரோஜினியும் நானும் ஒருத்தரை யொருத்தர் விரும்பினோம். எனக்கு அவதான்னு சின்ன வயசுலயே அம்மா எனக்குள்ள ஒரு ஆசையை விதைச்சிட்டு... எனக்கும் அவ மேல ஒரு கிரேஸ் உண்டு. அவளுக்கும் என் மேல விருப்பம் உண்டு. லெட்டர் எழுதியிருக்கோம்... ஃபோட்டோ கூட கொடுத்திருக்கா. ஆனா பணக்கார மாப்புள வந்தவுடனே மனசு மாறிட்டா. நான் மாமாகிட்ட அப்படி ஒரு எண்ணத்தோட பழகவேண்ணுட்டா. என் அம்மாவுக்குக் கோவம் வந்துட்டு... அவ வேணவே வேணாம்னுட்டாங்க. இப்ப எங்க ரெண்டு குடும்பத்துக்கும் ராசி இல்லே..."

படபடவெனப் பொரிந்தான்.

"ம்...."

"நீயும் அவங்களோட பேச வேணாம். என்னடா புருஷன் மொத மொதலா பேசறதே நல்லா இல்ல... ஒருத்தர்கிட்ட பேச வேணாம்னு சொல்றானேன்னு நினைக்காதே. எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தை அவள வெறுக்கிறது மூலமா தீர்த்துக்கிறேன். அவ ஏமாத்தற குடும்பம். அவ அன்னைக்கு அது மாதிரி சொன்னவுடனே எனக்கு பொம்பளைங்க மேலேயே வெறுப்பு வந்துட்டு... கல்யாணமே வேணாம்னுதான் இருந்தேன். அம்மாவோட கட்டாயம்..."

சொல்லி முடித்தவனைப் பார்த்த போது அவன் கண்கள் கலங்கி இருந்ததை கவனித்தாள்.

திருவாரூர் பாபு




# ஸ்ரீராம் பதில்கள்

டெபாசிட்டை மிக பாதுகாப்பான முறையில் உபயோகப்படுத்துவது, சரக்கு போக்குவரத்து தொழிலில் ஈடுபட்டுள்ள லாரிகளுக்கு நிதி உதவி அளிக்கும் நிறுவனங்களே. ஏனைய நிதிநிறுவனங்கள் பாதுகாப்பு குறைவான வழிகளில் பணத்தை கொடுத்துவிடுகிறார்கள். உதாரணமாக,

**பில் டிஸ்கவுண்டிங்** ஒரு குறுகிய கால வர்த்தகம் என்று நம்பி செய்கிறார்கள். பெரும்பாலும், இது போன்ற நிதி உதவி ஒரு அடைமான பொருள் இல்லாமல் கொடுக்கப்படுவதால், பண நஷ்டம் முற்றிலும் தவிர்க்க முடியாதது.

**'லீஸிங்'னு சொல்ற குத்தகை ஒப்பந்தம்:** இதில ஒரு சில தொழில்கள், பொருள்கள், இடங்களில் மட்டுந்தான் கடனுதவி அளிக்க முடியும். இந்த இரண்டிலுமே, கடன் வாங்கினவங்க திருப்பித்தர தவறினா, அவங்களோட சொத்துக்களை உடனடியா கையகப்படுத்தி விற்பனை செய்றது அவ்வளவு எளிதல்ல.



*ஒரு சந்தேகம். டெபாசிட் செய்றதுக்கு ஏற்ற நிதிநிறுவனத்தை எப்படி தேர்ந்தெடுக்கிறது ?*

*– பாரதி, நெல்லிக்குப்பம்*

ஆனா, லாரிகளுக்கு
**தவணைமுறை நிதியுதவி** செய்ற
வழிமுறை இருக்கே, அது
ரொம்ப பாதுகாப்பானது.
காரணம் தெரியுமா? லாரிப்
போக்குவரத்து தொழில் ரொக்க
அடிப்படையில் நடைபெறுது.
இது ஒரே ஒரு தொழில்
துறையை மட்டுமே நம்பி
செயல்படுவதில்லை. ஒரே ஒரு
பிராந்தியத்தில மட்டுமே
இயங்குவதும் இல்ல. அதனால,
இது ஆண்டுதோறும் நிலையான
வருமானம் தரக்கூடிய
லாபகரமான தொழிலா இருக்கு.
ஆக, லாரி உரிமையாளரால
தவணைகளை ஒழுங்கா
திருப்பித்தர முடியுது.

எனவே, இந்த மாதிரி
நிறுவனங்களில் டெபாசிட்
செய்யறதுதான் உங்க பணத்துக்கு
பாதுகாப்பு. அதிக
புத்திசாலித்தனமும்கூட.

(இறுதிப் பகுதி 52-ம் பக்கத்தில்)



அவன் சொன்னபடிதான் இருந்தாள். ஆனால் இன்று...? பேச வேண்டிய கட்டாயம்... சொல்லியே ஆக வேண்டிய சூழ்நிலை. இதைச் சொல்லாவிட்டால் எப்படி...?

ரகுராமன் கண்களில் படாமல் பேசி விடலாம் என்று நினைத்துத்தான் சாப்பிடப் போகும் வழியில் வைத்துப் பேசினாள். இரண்டே வார்த்தை. ஆனாலும் சாப்பிட்டுத் திரும்பி ரகுராமன் அந்த விநாடியிலா அவளைக் கடக்க வேண்டும்?

எரித்து விடுவது போல் அவளை பார்த்த போதே திடுக் என்று இருந்தது. ஐய்யோ என்று மனசு பதறிற்று. மண்டபத்தை விட்டுக் கிளம்பும் போது கோபமாக இருக்கிறான் என்று தெளிவாகப் புரிந்து விட்டது.

பஸ்ஸிலிருந்து இறங்கி ஆட்டோ பிடித்து வீட்டுக்குத் திரும்பும் போதும் ரகுராமன் அவளிடம் ஒரு வார்த்தை பேச வில்லை.

வீட்டுக்குள் நுழைந்ததும், படாரென அறைக் கதவை அறைந்து சாத்தினான்.

"ஸாரிங்க..." சாவித்திரி வற்றிப் போன தொண்டையில் வார்த்தை வராமல் விழுங்கினாள்.

''என்ன பேசினேன்னு...'' சாவித்திரி குழைந்த குரலில் கணவனை சமாதானப் படுத்தும் நோக்கில் பேசினாள்.

"என்ன எழவு பேசினியோ..." கத்தினான்.

''நான் சொல்றதைக் கொஞ்சம் பொறுமையா கேளுங்க. நான் அவுங்ககிட்ட பேசினது தப்புத்தான். ஆனா என்ன பேசினேன்னு கேளுங்க. அப்புறம் என்ன வேணும்னாலும் செய்யுங்க."

"என்ன பேசின...?" கடுப்பாய் கேட்டான்.

"ரொம்ப தேங்க்ஸ்'ன்னு சொன்னேன்.."

ரகுராமன் அவளை உற்றுப் பார்த்தான்.

"எதுக்கு...?" குழப்பமாய்க் கேட்டான்.

"அவுங்க மட்டும் அன்னைக்கு ஓங்களத் தான் கட்டிப்பேன்னு சொல்லி, அதிலேயே பிடிவாதமா இருந்து, ஓங்களைக் கட்டிக் கிட்டு இருந்தா. நீங்க எனக்கு கிடைச்சிருப் பீங்களா..? எனக்கு இப்படி ஒரு அற்புதமான புருஷன், சந்தோஷமான வாழ்க்கை அமை யக் காரணமா இருந்தவங்களுக்கு நன்றி சொல்றதுதானுங்க முறை..."

குரல் தழுயப் பேசிய சாவித்திரியை ரகுராமன் பக்கத்தில் இழுத்து அணைத்துக் கொண்டான்.

எஸ். யாதவநாராயணன்

# நட்புக்கும் விலையுண்டு

தொலைபேசி சப்தம் கேட்டு படுக்கையை விட்டு எழுந்தேன். காலையிலேயே யாராக இருக்கும் என்ற யோசனையோடு 'ஹலோ' என்றேன்.

கணேஷ் பேசினான்.

"உனக்கு இஞ்சினீயர் வேலாயுதம் பழக்கம் உண்டா?"

"ஏன் நல்லா தெரியுமே, பத்து வருச பழக்கமாச்சே."

"சரி இருக்கட்டும்... அரைமணி நேரத்துக்கு முன்னாடி, எல்லையம்மன் கோயில் பக்கமா ஸ்கூட்டரில் வரும் போது... எதிருல வந்த அவரது கார், என் வண்டி மேலே மோதிட்டது."

"ஐயய்யோ, அப்புறம்... உனக்கு ஏதும் அடியா?"

"இல்லை. என்னோட ஸ்கூட்டர்தான் கொஞ்சம் நசுங்கிடுச்சி. கார் ஓட்டிக்கிட்டு வந்த அவரு மேலதான்... தப்புங்கறத அவரே ஒத்துக்கிட்டாரு. ஸ்கூட்டருக்கு உண்டான ரிப்பேர் செலவையும் தரேன்னுட்டாரு. பத்து மணிக்கு வீட்டுல வந்து பாருங்கன்னு... விசிட்டிங் கார்ட்டு கொடுத்தாரு. என்னதான் இருந்தாலும்... அரசாங்க வேலையில உள்ளவரு. கைநீட்டி வாங்கித்தான் பழக்கமிருக்கும். கொடுப்பாருன்னு சொல்றதுக்கு உத்தரவாதமில்ல. அதனால, அவர் வீட்டுக்குப் போகும் போது, நீயும் கூட வந்தா நல்லாயிருக்குமின்னு பிரியப்படுறேன்."

"அதெல்லாம் ஒன்றும் யோசனை பண்ணாதே. நான் வரேன். நிச்சயமா வாங்கிடலாம்" என்றேன்.

இஞ்சினீயர் சமீபத்தில்தான் கார் வாங்கினார். அவருக்கு இன்னமும் சரியாய் ஓட்டத் தெரியாது.

'ஆள் மேல் அடிபடாமல் இருந்த வரைக்கும் ஏதோ நல்ல காலம்' என நினைத்துக் கொண்டேன்.

சிறிது நேரம் கழிந்து மீண்டும் தொலைபேசி அழைத்தது. எடுத்தேன். இந்த முறை இஞ்சினீயர் பேசினார்.

"வணக்கம் ஸார். ஏதோ கார் மோதி" என்பதற்குள் அவரே முந்திக் கொண்டார்.

"என்னய்யா, அந்த ஸ்கூட்டருக்காரன் உனக்கு பிரண்டா, நம்ம அசிஸ்டெண்ட் பக்கிரி சொல்றான்."

"ஆமாம் ஸார். என் கிளாஸ்மேட்."

"அப்படியா. ஒன்றும் பெரிய அடியில்ல... கார் மோதினதுல லேசா ஸ்கூட்டர் சைடு இஞ்சின் கவர் நசுங்கிடுச்சி. மத்தபடி இஞ்சின் எல்லாம் நல்லாயிருக்கு. செலவு என்ன ஆகுதோ, அத தரேன்னு சொல்லியிருக்கேன். இதான் வாய்ப்புன்னு அவன் பாட்டுக்கு வண்டியில ஏற்கெனவே உள்ள ரிப்பேருக்கெல்லாம் காசு கேக்கப் போறான்யா."

"அதெல்லாம் கேக்க மாட்டான் ஸார். நல்ல பையன்."

"சரி, ஒண்ணு செய்யேன். பத்து மணிக்கு அவன வீட்டுக்கு வரச் சொல்லியிருக்கேன், அப்ப நீயும் அவன் கூட வந்திடேன்."

"வரேன் ஸார்."

இஞ்சினீயர் சொன்னது போல் காலை சரியாய்ப் பத்து மணிக்கு நானும், கணேஷும் அவர் வீட்டுக்குச் சென்று விட்டோம்.

கணேஷ் வண்டிக்கு ஆகும் செலவு எவ்வளவு என்பதை விவரமாக ஒரு மெக்கானிக்கிடம் எழுதி வாங்கி வந்திருந்தான். எனக்கு அந்த துண்டுக் காகிதத்தைப் பார்த்ததும் 'ச்சீ' என்று ஆகி விட்டது. வெறும் முந்நூற்றி ஐம்பது ரூபா செலவுக்குதானா இத்தனை ஆர்ப்பாட்டம் பண்ணிக் கொள்கிறார்கள்?

அந்தத் தாளை அவனிடமிருந்து பெற்று பவ்வியமாக இஞ்சினீயரிடம் தந்தேன். வாங்கிப் பார்த்து விட்டு, அவர் முகம் சுளித்தார்.

"என்ன பிரதர், ஒரு சின்ன டிங்கரிங் வேலைக்கா முந்நூற்றி ஐம்பது ரூபா" என்றார் கணேஷைப் பார்த்து.

"ஆமாம் ஸார். நசுங்கினதை தட்டி நிமுத்த, அந்த இடத்துக்கு பெயிண்ட் பண்ணணுமுல்ல."

"அதான்ப்பா... அதுக்கா இவ்வளவு. இரு நூறு ரூபாய்க்கு மேல இதுல வேலையில்லையே... வேணும்னா, நானே தேர்முட்டிகிட்ட இருக்கிற மெக்கானிக் மகாலிங்கத்தை வைச்சி, உங்க வண்டிய ரிப்பேர் பண்ணித் தரவா?"

''என்ன ஸார், நீங்க பேசுறதைப் பார்த்தா... நான்ல்ல, என்னமோ வேணு மின்னு கூடுதலா எழுதி வாங்கிக்கிட்டு வந்த மாதிரி இருக்கு. உண்டான ரிப்பேர் செலவு தவிர.... உங்க காசு ஒத்தக் காசு எனக்கு வேண்டாம் ஸார்."

"ஏன் தம்பி சத்தமா பேசுறீங்க. நான் இப்ப உங்கள என்ன கேட்டுட்டேன்?'' என்று அவர் கேட்க, அடுத்து அவன் பேச என அவர்கள் பாதை மாறிக் கொண்டார்கள்.

நடுவில் இருக்கும் எனக்கோ, எதுவும் புரியாத நிலை. இவன் பக்கமும் சாய முடியாது. அவர் பக்கமும் சாய முடியாது. வெறும் முந்நூற்றி ஐம்பது ரூபா காசுக்கு ஏன்... இப்படி அடித்துக் கொள்கிறார்கள்? இந்த லட்சணத்தில் இருவரும் வசதியுள்ளவர்கள்தான். இதில் நாம் ஏன் தலையிட்டோம்? ஆதங்கம் எழுந்தது.

அரைமணி நேரம் கழித்து. வேறு வழியில்லாமல்... கடைசியில், எது நடந்தாலும் பார்த்துக் கொள்ளலாம் என்கிற தீர்மானத்தோடு... குறுக்கே பாய்ந்தேன்.

"முந்நூற்றி ஐம்பதும் வேண்டாம். இருநூறும் வேண்டாம் ஸார். இரண்டுக்கும் பொதுவுல இருநூற்றி ஐம்பது கொடுத்து... ரெண்டு பேரும் முடிச்சிக்குங்க'' என்று யோசனை சொன்னேன்.

என் பேச்சில் இரண்டு பேருக்கும் திருப்தி இல்லை என்றாலும், ஏதோ அரை மனசாய் ஒத்துக் கொண்டார்கள்.

அவர் பெரும் வயிற்றெரிச்சலோடு கொடுத்த இருநூற்றி ஐம்பது ரூபா பணத்தை அவன் வேண்டா வெறுப்பாகப் பெற்றுக் கொண்டான்.

புறப்பட்டோம். இஞ்சினீயர் என்னை தனியே அழைத்தார்.

"என் பக்கம் அழுத்திப் பேசுவேனுதானேய்யா உன்னைக் கூப்பிட்டேன். கடைசியில் அவனை அப்பவே வெளியில அனுப்பி, உன்னால முடிஞ்சதை பார்த்துக்கடா என்று சொல்லியிருப்பேன். ஏதோ உன் முகத்துக்காக ஒத்துக்கிட்டேன். நீ வந்ததால அனாவசியமா எனக்கு ஐம்பது ரூபா நஷ்டம்'' என்று குதித்தார்.

அவர், அப்படி பேசினது எனக்கு சங்கடமாயிருந்தாலும்... மனசைத் தேற்றிக் கொண்டு சொன்னேன்.

"கோவிச்சுக்காதீங்க ஸார். அவன் படிக்காத முட்டா பய. சொன்னதையே திரும்பத் திரும்ப சொல்றான். அவன்கிட்டே போய் என்னத்தைப் பேசச்



சொல்றீங்க அவன் கிடக்கிறான். இந்தாங்க ஐம்பது ரூபா."

"எதுக்கு?"

"நீங்க என்னால நஷ்டப்பட்ட பணம்" என்று என் பாக்கெட்டிலிருந்து எடுத்து நீட்டினேன். தயங்கினார்.

"வாங்கிக்கங்க ஸார். ஒன்றும் யோசனை பண்ணாதீங்க. இந்த காசை அவன்கிட்ட எப்படியாவது வாங்கிட மாட்டேன்'' என்றேன் வீராவேசமாக.

இப்படிச் சொன்னதும் இஞ்சினீயர் என்னிடமிருந்து பணத்தைப் பிடுங்காத குறை

## அருள்வாக்கு



அவரவர் மனத்தைப் பொறுத்து ஒன்றில் பிடிமானம் கொள்வதற்கென்றே இத்தனை தேவதைகள் இருக்கின்றன. தாயாரிடம் குழந்தை போல் பரமாத்மாவை அநுபவிக்க வேண்டும் என்கிற மனப்பான்மை உடையவனுக்கு அம்பாள் உபாசனை இருக்கிறது. ஒரே சாந்தத்தில் அமுந்திப் போக வேண்டுமென்ற மனோபாவம் உள்ளவனுக்கு தக்ஷிணாமூர்த்தி இருக்கிறார். ஆனந்தமாக ஆடிப் பாடிப் பக்தி செலுத்துவதற்குக் கிருஷ்ண பரமாத்மா இருக்கிறார்.

சூரிய மந்திரம், உபாசனா மார்க்கம் எல்லாவற்றையும் அந்த மகாபுருஷர்கள் நமக்குத் தந்திருக்கிறார்கள். இவற்றை முறைப்படி அநுஷ்டித்தால் நாமும் அந்தந்தத் தேவதையின் அநுக்கிரகத்தைப் பெற முடியும். எந்தத் தேவதையாக இருந்தாலும் சரி, அது முடிவில் பரமாத்மாவே ஆகையால், நாம் சந்தேகம் கொள்ளாமல் பூரண சிரத்தையோடு பக்தி வைத்தால் அது நமக்கு சம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை தரும் – இந்த விடுதலைக்கு நாம் பக்குவப்படுவதற்கு முன் நம் லௌகிக வேண்டுதல்களைக் கூட நிறைவேற்றி அநுக்கிரகிக்கும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

• • •

## பிரார்த்தனை

"எங்கள் இறைவனே! நாங்கள் மறந்து போயிருப்பினும், பிழை செய்திருப்பினும் நீ எங்களை (குற்றம்) பிடிக்காதே! எங்கள் இறைவனே! மேலும் எங்களுக்கு முன் சென்றோர் மீது நீ பாரத்தைச் சுமத்தியது போல் எங்கள் மீதும் பாரத்தைச் சுமத்தி விடாதே! எங்கள் இறைவனே! மேலும் நாங்கள் தாங்க இயலாத பாரத்தை எங்கள் மீது சுமத்தி விடாதே! எங்களைப் பொறுத்தருள்வாயாக! எங்களுக்கு மன்னிப்பு வழங்குவாயாக! எங்கள் மீது கருணை பொழிவாயாக! நீயே எங்கள் பாதுகாவலனாவாய்! (சத்தியத்தை) நிராகரிக்கும் மக்களுக்கு எதிராக வெற்றி கொள்ள எங்களுக்கு உதவி செய்வாயாக!"

— திருகுர்ஆனிலிருந்து.....

யாக வாங்கிக் கொண்டார்.

அவர் வீட்டிலிருந்து இறங்கினேன். கணேஷ் பிடித்துக் கொண்டான்.

"எனக்குச் சாதகமா இருப்பேன்னு தானே, உன்னை வேலை மெனக்கட்டு அழைச்சிக்கிட்டு வந்தேன். கடைசியிலே இப்படி பழிவாங்குவேன்னு கொஞ்சம் கூட எதிர்பார்க்கலே. உன் மொகத்துக்காகத்தான் பொறுமையாயிருந்தேன். இல்லைன்னா அவனை எப்படி கவனிக்கணும்ன்னு, எனக்குத் தெரியாதா? எனக்கு நூறு ரூபாய் தண்டம்" என்றான்.

உடனே அவன் தோள் மேல கை போட்டு ஆதரவாகச் சொன்னேன்.

"கணேஷ் என்னதான் இஞ்சினீயர் படிச்சவனாயிருந்தாலும், அறிவில்லேன்னு தெரிஞ்சு போச்சு. அவன்கிட்ட போய் எதை பேச சொல்றே? சரி இந்தா நூறு ரூபாய்."

"எதுக்கு?"

"நீ என்னால நஷ்டப்பட்டது?"

"அதை இஞ்சினீயருல்ல கொடுக்கணும்."

"இது அவர் காசுதான்" என்று சொன்னதும் புரியாமல் விழித்தான். நானே தொடர்ந்து சொன்னேன். "இப்ப தனியா இவ்வளவு நேரம், அவர்கிட்ட என்னத்தப் பேசினேன்னு நினைக்கிற? உன் பக்கத்து நியாயத்தை பொறுமையாய் அவருக்கு எடுத்துச் சொல்லி... வேற ஒருத்தன்னா... மோதின எடத்துலேயே ஆயிரம், இரண்டாயிரம் பிடுங்கியிருப்பான். ஏதோ உங்க நல்ல காலம். என் பிரண்டு அப்படிப்பட்டவன் இல்லன்னு விளக்கமா பேசி, அந்த நூறு ரூபாயைப் பிடுங்கிட்டு வந்துடேன்னுல்ல" என்று பொய் சொல்லி விட்டு, என் பாக்கெட்டிலிருந்து நூறு ரூபாயை எடுத்து நீட்டினேன்.

என் பேச்சில் அவனுக்கு நம்பிக்கை வந்திருக்க வேண்டும். பணத்தை வாங்கிக் கொண்டான்.

மொத்தம் என் பணம் நூற்றி ஐம்பது ரூபாய் போன கையோடு தலையெழுத்தே என்று வீட்டிற்கு வந்தேன்.



பாரத ஸ்டேட் பாங்க் அதிகாரி ஸ்ரீ R. பாலசுப் பிரமணியனின் தகப்ப னார் பேராவூர் பிரும்மஸ்ரீ S. ராமச்சந்திர அய்யர் அவர்களின் சதாபிஷேக வைபவம் அண்மையில் சென்னை, ராஜா அண் ணாமலைபுரம் ஸ்ரீ சிருங்க கிரி ப்ரவசன மண்டபத் தில் நடந்தேறியது. நண் பர்களும் உறவினர்களும் நகர பிரமுகர்களும் வந் திருந்து சதாபிஷேக வைபவத்தை சிறப்பித்த னர்.

## மீண்டும் மகத்தான டெபாசிட் சேகரிப்பு!

# KKR

கடந்த ஆண்டு இதே நாட்களில் எங்களுடைய
ஃபிக்சட் டெபாசிட் அழைப்பிற்கு
அமோக ஆதரவளித்து ஒத்துழைத்த அனைவருக்கும்
எங்களது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## இப்பொழுது KKR மீண்டும் ஃபிக்சட் டெபாசிட்டுகளை 15–8–'95 வரை வரவேற்கிறது.

**25%**

ஆண்டுவட்டி
+2% ஊக்கத்தொகை
குறைந்தபட்ச டெபாசிட் ரூ.5000/–

மீண்டும் உங்கள் ஒத்துழைப்பை ஆவலுடன் எதிர்நோக்குகிறோம்.



**KKR ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்**

121, மாதவரம் ஹைரோடு (வடக்கு)
(லக்ஷ்மி அம்மன் கோயில் அருகில்), பெரம்பூர், சென்னை-600 011.
ஃபோன் : 5376796, 5375456    ஃபேக்ஸ் : 044-5377777

EFFICIENT/KKR/101/95

இணைந்து வளர்வோம் உங்கள் இணையற்ற நம்பிக்கையால்

# என்னுயிரும் நீயல்லவோ

**பாலகுமாரன்**

**19**

ஹூர்து ஆபத்சகாயம் உள்ளங்கைகளை மடித்து நெற்றியில் குட்டிக் கொண்டார். அந்த அரசமரத்தடி பிள்ளையாரை ஆவலுடன் பார்த்தார்.

"அது இன்னா சாங்கியம் பண்ணனுமோ பண்ணிடலாம். எல்லாம் நல்ல விலைக்குப் போகனும். நிலம் சொத்துன்னு தான் எங்களுக்குத் தெரியும். நிலம் தேவதைன்னு நீங்க சொல்லித்தான் கேள்விப்படறோம். எனக்குப் பேர்தான் ஹூர்து ஆபத்சகாயம். ஆனா நான் இந்துதான். நாடார் சமூகம். கல்யாணமெல்லாம் இந்து முறைப்படிதான் செய்வோம். பேர் ஒண்டி கிறிஸ்துவப் பேரா இருக்கும். இப்ப பாருங்க நம்ம புள்ளை பேரு ராபர்ட் குணசேகரன். பொண்ணு பேரு எஸ்தர்மனோகரி. ஒரு தமிழ்ப் பேரை கிறிஸ்துவப் பேரோட அணைச்சாப்பல வைச்சுக்குவோம். துண்ணூறு குங்குமம் வைச்சுக்குவோம். தீபாவளி, பொங்கல், ஆயுதபூஜையெல்லாம் சந்தோஷமா கொண்டாடுவோம். ஏன்டா கொண்டாடறீங்கன்னு கேட்டா தெரியாது. இன்னா காரணம்.... இதும் கதை சொல்லுனு கேட்டா தெரியாது. இப்பக் கூட தலைல குட்டிக்க ஹூர்துன்னீங்க. குட்டிக்கினேன் ஏன் குட்டிக்கினேன்... கேட்டா தெரியாது.

"நாலு தலைமுறையா இந்தப் புள்ளையாரு இந்த மரத்தடியில இப்படித்தான் கொஞ்சம் கோணலா உட்கார்ந்தினு



இருப்பாரு. நாங்க கோணப் புள்ளையாருன்னுதான் கூப்பிடுவோம். சிலையே கோணலா இருக்குன்னுதான் நினைச்சோம். நீங்க சொல்லித்தான் தெரிஞ்சது மண்ணு சரிஞ்சு, புள்ளையாரு சாய்ஞ்சிருக்கின்னு. நீங்க பதற்றத பாத்து எங்களுக்கும் பயம் வந்துடுச்சு. ஐந்நூறு ரூபாய் செலவு பண்ணி சாமியை நிமித்தி கூரை போட்டுட்டோம். ஐந்நூறு ரூபாய் செலவு பெரிசில்ல; மனசு முக்கியம். மாசத்துக்கு ஆயிரம் ரூபாய் கூட வருமானமில்லாத எஸ்டேட்ல, ஐந்நூறு ரூபாய் புள்ளையாருக்கு யாராவது செலவழிப்பாங்களா... இந்த எஸ்டேட் நல்லபடியா விக்கணும்னுதான், புள்ளையாருக்குச் செய்தேன். ஒரு வேண்டுதல் மாதிரி செய்தேன். பிரேசிலுக்கு முன்னாடி, கென்யாவுக்கு முன்னாடி காப்பிக் கொட்டைல இது ஒண்ணுமே இல்லை. இதுல பாடு இல்லைன்னாலும் லாபமும் இல்லை. அதுவும் தவிர நம்ம பசங்க ரெண்டும் ஆஸ்திரேலியா




போய் செட்டிலாயிடுச்சிங்க.

"இங்கனயே, இந்த மலையிலேயே நீங்க தங்கிக்கலாம். குடும்பத்தை வேணா கூட்டி வைச்சுக்கலாம். சமைக்கறதுக்கு சாமானும், அரிசி, பருப்பு கொடுத்து ஆயிரத்தைந்நூறு ரூபாய் சம்பளம் தரேன். உள்ள வந்து யாரும் பாக்கணும்னா சுத்திக் காட்டுங்க. மொத்தம் பதினாறு ஏக்கர்னு சொல்லுங்க. ஏலக்காய் போட்டு பார்த்தோம் எடுக்கலைன்னு சொல்லுங்க. காப்பியும், மிளகும்தான் வருதுன்னு சொல்லுங்க. நூத்திப் பதிமூணு சில்வர் ஓக்குனு சொல்லுங்க, நாப்பத்திரெண்டு தேக்கு இருக்குனு சொல்லுங்க. எனக்கு பிராமின்ஸ்னா ஒரு பிரியம், ஒரு மரியாதை. அவங்க பயந்தவங்க, நேர்மையானவங்கன்னு ஒரு நம்பிக்கை. ஆமா புள்ளையாருக்கு ஏன் தலைல குட்டிக்கிறோம்?"

கிருஷ்ணமூர்த்தி ஐயர் தோளில் உள்ள துண்டை மாற்றிக் கொண்டார். வினாயகரையும், ஹூர்து ஆபத்சகாயத்தையும் மாறி மாறிப் பார்த்தார். அவர் வாழ்க்கையைப் பற்றி அவருக்குச் சிரிப்பு வந்தது.

"நம்ம உடம்புல நூற்றுக்கணக்கான நாடிகள் ஓடறது. ஒவ்வொரு நாடிக்கும், ஒவ்வொரு குணமிருக்கு, நெற்றிப் பொட்டுக்கருகே உள்ள நாடிக்குப் பெயர் அமிர்த நாடி. லேசா ரெண்டு பக்கமும் சம அளவில தட்ட அந்த நாடியிலிருக்கிற அமிர்தம் உடம்பு முழுக்கப் பரவறது. தென் யு பிகம் பிரிஸ்க் அண்ட் பிரைட். கடவுள் நம்பிக்கைங்கிற பேர்ல ஒரு சின்ன அக்குபஞ்சர், பிரஷர் ட்ரீட்மெண்ட்."

ஹூர்து ஆவலோடு அந்த ஆங்கிலப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

வருமானமே இல்லாத அந்த காப்பி எஸ்டேட்டை விற்று விடுவது என்று ஹூர்து தீர்மானித்து இரண்டு வருடங்களாகின்றன. ஆனால் விலை கேட்கக் கூட யாரும் வரவில்லை. அப்படி வந்தவர்களை வரவேற்று விவரம் சொல்ல காப்பி எஸ்டேட்டில் சரியான ஆள் இல்லை. ஹூர்துக்கு போடியில் நெல் வயல் இருக்கிறது. தென்னந்தோப்பு இருக்கிறது. கோழிப் பண்ணை இருக்கிறது. துணிக்கடை இருக்கிறது.

இது தவிர பையனும், பெண்ணும் ஆஸ்திரேலியா போய் தாவர ஆராய்ச்சி செய்து கைநிறைய சம்பாதிக்கிறார்கள். அதனால் லாபம் இல்லாத அந்த எஸ்டேட்டை விற்று விட ஹூர்துக்கு எண்ணம் வந்தது. ஆறு தலைமுறையாய் வந்த எஸ்டேட் அது. ஐரோப்பிய பாதிரிகள் தமிழ் தேசத்தின் வெய்யில் தாங்காமல் சற்று குளுமையான இந்த மலையை வாங்கி தங்களுக்கு வீடு கட்டி கொண்டார்கள். அவர்களுக்கு கூட இருந்து ஒத்தாசை செய்ய ஹூர்துவின் தாத்தாவுக்கு தாத்தா வந்து சேர்ந்தார். படிப்பறிவே இல்லாத அவர் ஐரோப்பிய பாதிரியிடம் மிக உண்மையாய் நடந்து கொண்டார். திருடவோ, பொய் சொல்லவோ அவருக்கு வராது. கற்றுக் கொடுத்தாலும் அப்படி செய்ய முடியாது. அந்த தாத்தாவின் பேரனுக்கு ஐரோப்பிய பாதிரிகள் ஆங்கிலம் கற்றுக் கொடுத்தார்கள்.

வெள்ளையர்கள் இந்தியாவுக்கு சுதந்திரம் கொடுத்து விட்டுப் போனாலும் அவர்கள் இங்கிலாந்துக்குப் போகாமல், அவர்கள் அந்த மலையிலேயே அடக்கமானார்கள். ஐரோப்பியருக்குப் பிறகு ஆங்கிலோ

இந்தியப் பாதிரியும், அவருக்குப் பிறகு தமிழ்ப் பாதிரியும் தலைமையேற்றுக் கொண் டார்கள்.

ஐரோப்பிய பாதிரி இறந்த போது, மலையின் ஒரு பகுதியை தம்மிடம் வேலை செய்பவர்களுக்கு அன்பளிப்பாய் கொடுத்தார். அதை அவர்கள் பங்கு போட்ட போது கிடைத்ததுதான் இந்த எஸ்டேட். காடாய் இருந்த இடத்தை காப்பித் தோட்டமாய் மாற்றியது ஆங்கிலோ - இந்தியப் பாதிரி. அந்தக் க்த்தோலிக்கப் பாதிரிகள், இங்கே யாரையும் மதம் மாறச் சொல்லவில்லை. எப்போதாவது காணிக்கை மட்டும் கேட்டார்கள்.

எவருக்கேனும் குழந்தை பிறந்தால் வீட்டிற்கு வந்து காற்றில் சிலுவைக் குறியிட்டு புனித நீர் தெளித்து பாட்டுப் பாடி பைபிள் படித்து, நாமகரணம் சூட்டுவார்கள். அந்த கத்தோலிக்கப் பாதிரிகளை மதிக்கும் வகையில் பெயர் மட்டும் கிறிஸ்துவப் பெயராக இருக்கும். வாழ்க்கை இந்துவாக இருக்கும்.

இந்த லூர்துவின் குழந்தைகள் இரண்டும் ஆஸ்திரேலியா போக அந்த பாதிரிகள்தான் காரணம். மலையில் உள்ள காடு மெல்ல மெல்ல அழிந்து, காப்பி தோட்டமாய் மாறியது. தாத்தா நட்ட சில்வர் ஓக் மரங்கள் உயர்ந்து நிற்கின்றன. விற்க மனசில்லை. விற்றால் பெரிய அரிசி ஆலை நிறுவலாம். நவீன அரிசி ஆலை கொண்டு வந்து விட்டால் சுலபமாய் பெரிய மனிதனாய் ஆகி விடலாம். கொஞ்சம் காசு செலவழித்து அரசியல் செல்வாக்குத் தேடலாம்.

ஆனால் எஸ்டேட்டை விற்பதற்கு சரியான தகவல் சொல்ல எஸ்டேட்டிலேயே ஒரு ஆள் தேவைப்படுகிறது.

"ப்ளீஸ் ஒரு டென் ருப்பீஸ் தரேளா?" என்று பிச்சை கேட்ட ஐயரை கையோடு கூட்டி வந்து விட்டார். ஐயருக்கு பெரிய கம்பெனியில் கேஷியர் உத்தியோகம். நல்ல சம்பளம். ரேஸ் பழக்கம் தொற்றிக் கொள்ள கம்பெனி காசில் கை வைத்திருக்கிறார். கண்டித்து வெளியே துரத்தி விட்டார்கள். குடும்பம் ஆத்திரமுற்று இழிவு செய்ய, அவர் கோபித்துக் கொண்டு வெளியே வந்திருக்கிறார். பிச்சை எடுத்து இருக்கிறார். லூர்து மடக்கிக் காரணம் கேட்க, எல்லா உண்மையும் வெட்கமின்றிச் சொன்னார்.

"ஐயரா பொறந்துட்டு திருடலாமா? வழிகாட்டி தப்பு பண்ணலாமா, ஏதோ கெட்ட நேரம் விடுங்க, எல்லா பாவங்களும் மன்னிக்கப்படும். மரி மன்னிப்பார். அன்னை மரிக்கு ஸ்தோத்திரம்." எஸ்டேட்டில் வேலை தருகிறேன் என்று சொல்ல, கிருஷ்ணமூர்த்தி ஐயர் சரி என்றார்.

சென்னையில் ஒண்டுக் குடித்தனத்தில் இருந்தவருக்கு, இந்த பெரும் பரப்பு அதிசயமாய் இருந்தது. ஒரு நிம்மதியைக் கொடுத்தது. கிருஷ்ணமூர்த்தி ஐயரின் மனைவி மிக அழகானவள். கெட்டிக்காரி. வயதுக்கு வந்த இரண்டு பெண் குழந்தைகள் வேறு உண்டு.

"குழந்தைகள் சித்திரம் எழுதினாப்போல பளிச்சினு இருக்கு. ரெண்டும் நன்னா படிக்கிறது, பாடறது. ஆனா அது மட்டும் போதுமா, காசு வேண்டாமா, காசில்லாம கல்யாணம் நடக்குமா... இன்னிக்கு வேட்டைக்கு இறங்கினாத்தானே அதுங்க இருவது வயசில ஏதாவது நிக்கும்." மனைவி இரவில் கட்டிக் கொண்டு மந்திரம் ஓதினாள்.

அவர் காசு வேட்டைக் காகத்தான் குதிரை' ரேசுக்குப் போனார். எடுத்தவுடன் கிடைத்த வெற்றியால் இடைவிடாது இறங்கினார். சூது வேதனை தந்தது. வீட்டை விட்டு விலக்கிற்று.

ஒரு ரோஷத்தில் வீட்டை விட்டு வந்து விட்டாரே தவிர, கிருஷ்ணமூர்த்தி ஐயர் என்கிற குடும்பியின் மனது குழந்தைகளிடமும் கொஞ்சிப் பேசுகின்ற மனைவியிடமும் இருந்தது.

"இன்னிக்கு குதிரை ரேசுக்குப் போவேள். நாளைக்கு என்னையும் குழந்தைகளையும் வாடகைக்கு விட்டு சம்பாதிப்பேள். யாரையாவது கொன்னா அஞ்சு லட்சம் காசு தரேன்னா அதுவும் செய்வேள். இப்படிப்பட்ட புருஷன் எனக்கு வேணாம், சாமி..." அவள் கத்த வெளியே வந்து விட்டார். ஆனால் மனம் அவளுக்காக ஏங்கியது அவளும் ஏங்குவாள் என்று வருத்தப்பட்டது.

**கா**ப்பி ஒரு செடி, அதிலிருந்து சிவந்த சிறிய



போலீஸ் : வர வர திருடன் வடிவேலுவோட பந்தா தாங்க முடியல!
அவர் : என்ன விஷயம்?
போலீஸ் : திருட்டுத் தொழிலில் அவன் சாமர்த்தியத்தை அரை மணி நேரம் புகழ்ந்து பேசினாத்தான் மாமூலம் தர்றான்!
— அம்பை தேவா




# ஸ்ரீராம் பதில்கள்

நண்பர் கூறுவதற்கு பல காரணங்கள் இருக்கத்தான் செய்கின்றன.

- ஸ்ரீராமில் நீங்கள் டெபாசிட் செய்யும்போது, அத்தொகை முழுவதும் லாரிகளுக்கு நிதியுதவி செய்யும் தொழிலில் முதலீடு செய்யப்படுகிறது. வழங்கப்படும் கடன்தொகையோ 100% திரும்பப் பெறப்படுகிறது.
- நிர்வாக முறைகளை சீர்தூக்கிப் பார்க்க, டெல்கோ, அசோக் லேலண்ட், ஸிடி யூனியன் வங்கி இவர்களின் பிரதிநிதிகள் நிர்வாக அமைப்பில் (Board of Directors) இடம் பெற்றிருக்கிறார்கள்.
- 20 வருடங்களாக, லாரிகள் வாங்க கடனுதவி வழங்கி வரும் ஸ்ரீராம், ரூ.225 கோடி டெபாசிட்டுகளும், 2,00,000 டெபாசிட்தாரர்களின் நம்பிக்கையையும் பெற்றுள்ளது. உங்களுக்கு சேவை செய்ய நாடெங்கும் கிளைகள் திறந்துள்ளது.

எனவே, நீங்கள் ஸ்ரீராமில் டெபாசிட் செய்யும் போது, உங்கள் பணத்துக்கு அதிகபட்ச



டெபாசிட் செய்ய ஸ்ரீராம்தான் சிறந்த நிறுவனமென என் நண்பர் சொல்கிறாரே ?

– க. ரகோத்தமன்,
உடுமலைப்பேட்டை

பழங்கள் வருகின்றன. பழத்தில் இரண்டின் கீழ் மூன்று பாகம் விதையாகவே உள்ளது. அந்த விதையில் காஃபின் என்கிற மிக மெல்லிய போதைப் பொருள் உள்ளது. இந்த காஃபின் முதலில் ஒரு உற்சாகத்தைக் கொடுத்தாலும், பழகப் பழகப் பிற்பாடு சோர்வைக் கொடுக்கக்கூடியது. பலவீனத்தைத் தருகிறது. ஐயர் காப்பியைப் பற்றி படிக்க ஆரம்பித்தார்.

அவருக்கு என்று ஒதுக்கப்பட்ட வீட்டில் இரண்டு படுக்கை அறைகளும், பெரிய ஹாலும் விசாலமான சமையல் அறையும், முன்பக்கம் ஆபீஸ் ரூமும் வராந்தா - வீடு சுற்றி ஏகப்பட்ட பூச்செடிகளும் இருந்தன. புத்தகம் படித்து காப்பியை பற்றித் தெரிந்து கொண்டார். பழைய ஃபைல்களை பார்த்து பராமரிப்பு பற்றி தெரிந்து கொண்டார். ரெண்டாயிரம் பேர் வேலை செய்யும் கம்பெனியில் முக்கியமான பொறுப்பைக் கவனித்தவருக்கு இந்த வேலை அல்வாத் துண்டு.

எஸ்டேட்டின் எல்லையோரம் நடந்து போக அதன் விஸ்தீரணம் புரிந்தது. இதை ஏன் ஹூர்து விக்கிறான். யார் வாங்குவார் என்று கேள்வி எழுந்தது. எஸ்டேட் வாசலில் சாய்ந்து கிடந்த பிள்ளையாரை உடனே நிமிர்த்தி வைக்க வேண்டும் என்று ஹூர்து விடம் கட்டளையிட்டார்.

"அப்பனே இந்த எஸ்டேட்டை காவல் காக்க எனக்குத் தெரியாது. உனக்கும் இந்த நிலத்தில் உள்ள தேவதைகளுக்கும் என் நமஸ்காரம். சரிஞ்சு போன என் வாழ்க்கையை நிமித்தி வை. நான் சாகறதுக்குள்ள வேறொரு இடத்தில் உனக்கு கோவில் கட்டறேன்." மனசு கைகூப்பி வேண்டியது. எஸ்டேட்டை சுற்றி வந்த போது யாரோ வாசலில் உட்கார்ந்து இருந்தார்கள்.

"யாரு?"

"இந்த எஸ்டேட் விலைக்கு வருதுங்களா?"

"ஆமாம்."

"என்ன விலை?"

"யாரு வாங்கப் போறா?"

"நாங்கதான்."

"தனியா குத்துக்கால் போட்டு உட்கார்ந்துறு நாங்கதான்னா இன்னா அர்த்தம்?"

"எங்க பின்னாடி ஒரு படையே இருக்குன்னு அர்த்தம்."

"போய் படையோட வாங்க பேசவோம்."

"ஏன் எங்களோட பேச மாட்டீங்களா?"

"யார் கூடயும் பேசலாம். பேச்சு நேரா



**தந்தை :** நீ ஒரு தாயில்லாப் பிள்ளை என்கிற குறையே தெரியாதபடி தாய்க்குத் தாயாகவும், தகப்பனுக்குத் தகப்பனாகவும் இருந்து வளர்த்து வந்திருக்கேன்! இனி மேல் ஒரு தகப்பனாக மட்டும் இருக்கறதுன்னு தீர்மானிச் சுட்டேன்!

**மகன் :** அட, புரியும்படியாத்தான் சொல்லித் தொலை யேன் - இன்னொரு கல்யாணம் செய்துகொள்ளப் போறி யாக்கும்?

— பெ. கலாசாமி

இருக்கணும்."

"இன்னா மறைச்சிட்டோம்?" - வினாயகம் எழுந்து நின்றான்.

"இது காப்பி எஸ்டேட், கடலை மிட்டாய் இல்ல. விலை பேசறவங்க யார்னு தெரியாம விவரம் சொல்ல மாட்டோம்."

"ஒரு நாளைக்குப் பதினைஞ்சு பேர் வர்றாங்க. அத்தினி பேர்கிட்டயும் விலை சொல்லினு இருந்தா மத்த வேலை கவனிக் கறது எப்படி?" ஐயர் காப்பியிலேயே ஊறி யது போல் கம்பீரமாய்ப் பேசினார்.

வினாயகம் யோசித்து விட்டுப் பணி வானான். ஒரு செட்டிப் புள்ளைங்க. மலைக்கு அந்தண்ட நாப்பது ஏக்கர் ஏலக் காய் எஸ்டேட் வைச்சிருக்குது. தகப்பனார் சமீபமா செத்துரவே சொத்துப் பிரிச்சாங்க. எஸ்டேட் தவிர கையில ரொக்கமா துட்டு வேற வைச்சுருக்குது. ஏலக்காய்ல இருந்துக் கிட்டே காப்பியும் வாங்கணும்னு ஆசை. நான்தான் அந்தப் புள்ளைக்கு எல்லாம். நம்மை கேட்டுக்கிட்டுதான் நாலு பேரோட பேசும். நான் சொன்னாத்தான் விஷயத்தி லேயே இறங்கும்."

"என்ன பேரு, என்ன வயசு?"

"பேரு கதிரேசன்ங்க, வயசு இருபத்தி நாலு, இருபத்தி அஞ்சு இருக்கும்."

"பார்ட்டிய கூட்டிட்டு வாங்க பேச வோம்."

"நமக்கு எவ்வளவு தருவீங்க?"

"இன்னா?"

"எனக்கு எவ்வளவு கமிஷன்?"

"இப்படி ஒரு விஷயம் உண்டோ? விற்ப தற்கும் வாங்குவதற்கும் கமிஷன் வேற உண்டோ? ஐயர் மூளை பரபரப்பாயிற்று. கூட்டிண்டு வாங்கோ பார்ப்போம்."

"கமிஷன் சொன்னாத்தானே கூட்டிட்டு வர முடியும்."

"நீங்க கூட்டிட்டு வர வேண்டாம்." ஐயர் பளிச்சென்று அறுத்தார்.

"அப்போ விக்கிறதா இல்லீங்களா?" வினாயகம் ஆச்சர்யப்பட்டான்.

"விக்கப் போறோம், உங்களை மாதிரி ஏஜண்ட்களை உள்ள சேக்க மாட்டோம். வாங்கறவங்களோட நேரா பேசுவோம்."

"இது இன்னாங்க புதுசா இருக்கு."

"ஆமாம். புதுசுதான். ஏஜண்டோட பேசறதில்லை. ஏஜண்ட்களை உள்ள விடற தில்லை. நீங்க போலாம்."

வினாயகத்தை வெளியே அனுப்பி விட்டு கிருஷ்ணமூர்த்தி ஐயர் தானே ஏஜண் டாக வேண்டும் என்று ஆசைப்பட்டார். தன் குடும்பத்திற்குக் காக சம்பாதிக்க வேண் டும் என்ற வெறி மறுபடியும் தொற்றிக் கொண்டது.

(தொடரும்)

## ருசி கண்ட பூனை!

**ஸ்**டார் டி.வி. இந்தியாவில் ஆங்கிலக் கலாசாரத்தைப் புகுத்தி கொடி கட்டிப் பறக்கிறது அல்லவா? கடந்த 1994 ஆம் ஆண்டு மட்டும் விளம்பர வருவில் அது ஈட்டியுள்ள தொகை ரூ. 32 கோடி ரூபாய்! இதனால் உற்சாகம் அடைந்த ஸ்டார் டி.வி. வெகு விரைவில் இந்தியாவுக்காக தனிச் சேனலையே அறிமுகப் படுத்தப் போகிறது!

— வி. எஸ். ராஜகோபால்



## அதிசயம்! ஆனால் உண்மை!

**த**ஞ்சைமாவட்டம், திருப்பனந்தாளுக்கு அருகில் உள்ள அத்திப்பாக்கம் என்ற கிராமத்தில் 19.7.95 அன்று மாலை 6.30 மணியளவில் மாசிலாமணிப் பிள்ளை நோய்வாய்பட்டு இறந் தார். அவரது துணைவியார் அவர் இறந்த அரை மணி நேரத்திற்குள் இறந்து விட்டார். திரைப்படங் களில் பார்ப்பது போன்று உண்மையில் காண நேர்ந்தது. ஒரே பாடையில் சவ ஊர்வலம், ஒரே மேடையில் தகனம். நெஞ்சை நெகிழச் செய்த நிகழ்ச்சி.

— கி. சங்கர்

மனதைச் சண்டி இழுக்கும் ஓலத்தைக் கேட்டு அலமந்து போய் நிமிர்ந்து உட்கார்ந்தான் சித்தார்த்தன். மனம் மறுநாளுக்குப் போட்ட கணக்குகளைத் தப்பி, பிரசவ வார்டில் இருக்கும் மனைவியின் மேல் குவிந்தது. அவன் திடுக்கிட்டதைப் பார்த்த எதிர் பெஞ்ச் மாமி, "இப்போ தான் தொடங்கியே இருக்கு," என்றாள் கணவனிடம். சொல்லி விட்டு, சித்து கவனிக்கிறானா என்று பார்த்தான்.

ஹர்யான்விகளுக்கு மத்தியில், சண்டிகாரின் ஒரு பிரபலமான, பணக்காரத்தனமான தனியார் மருத்துவ மனையில் தலையில் கை வைத்து அமர்ந்திருக்கும் இந்த சித்து, ஒரு தமிழன்தான்.

ஐந்து வயதில் அனாதையான இந்த சித்துவிற்கு, ஹரியானாவில் தமிழ் மனைவி வாய்த்தது அதிர்ஷ்டம்தான்.

ஐந்து வயதில் இருந்து உறவினர் தயவை எதிர்பார்த்து, முட்டி மோதி மேலே படித்து நாயாய் அலைந்து லோன் வாங்கி, கடை வைத்து சகலத்துக்கும் சண்டை போட்டுச் சலித்த வாழ்வில், என்ன விபரீதம் நடக்குமோ என்று பயந்து, காதலியைப் பெண் கேட்கப் போன இடத்தில், "சித்தார்த்! நீங்க எந்த ஜாதின்னு எல்லாம் நாங்க கவலைப் படலை. எங்க ஃபேமிலி கொஞ்சம் முற்போக்கு. நீங்க இப்ப ஒரு ஸ்டோர் வைச்சு நடத்தறீங்க. உங்களுக்கு இருக்கிற திறமைக்கு, பின்னால பெரிய பிஸினஸ்மேன் ஆயிடுவீங்க. கல்யாணத்துக்கு எங்களுக்கு சம்மதம்," என்று பஞ்சாபகேசன், இவன் மாமனார்.

தலையில் கைவைத்து உட்கார்ந்திருந்த சித்துவிற்கு, சிரிப்பு வந்தது. மாமா நம்பியது வீண் போகவில்லை. ஒரு ஸ்டோரில் இருந்து, பல ஸ்டோர்கள் சண்டிகார் முழுதும், ஹரியானா முழுதும், இந்தியா முழுதும் என்று அவர் போட்ட கணக்குத்தான் தப்பியது. கவர்மெண்ட் வேலையில், கிளார்க்காக இருக்கும் மாமாக்களுக்கு ஒரு பிஸினஸ் துறையில் இருந்து, மற்றொன்றுக்குத் தாவுவது என்பது விபரீதமாகத் தோன்றுகிறது. இவ்வளவு சீக்கிரம், பெண்டாட்டியின் முதல் பிரசவத்தை இந்த மேன்மையான தனியார் மருத்துவமனையில் நடத்துமளவு தான் உயர்ந்ததற்குக் காரணம், தன்னுடைய பிஸினஸ் மாற்றமே என்று உறுதியாக நம்பினான் சித்து. அவன் மாமா அப்படி நினைக்கவில்லை. அதனால்தான் எதிர் பெஞ்சில் உட்கார்ந்து அவனை முறைத்துக் கொண்டிருந்தார்.

இப்பொழுது அலறல்கள் தொடர்ந்து வந்து கொண்டிருக்க, சித்துவின் முகம் வெளிறியது. அருகில் அவனைப் பார்த்துக் கொண்டிருந்த சர்தார்ஜி, "சில பேரால இந்தச் சத்தத்தைப் பொறுக்க முடியாது. ரொம்ப மென்மையான மனசு," என்று பஞ்சாபியில் தன் பக்கம் இருந்த மகனுக்கு விளக்கம் கொடுத்தார்.

நர்ஸ் ஒருத்தி சித்துவின் கலவர முகத்தைப் பார்த்து அருகே வந்து, "எல்லாம் நல்லா நடக்கும். கவலைப்படாதீர்கள்," என்றாள் ஹிந்தியில்.

சித்து எழுந்து வெளியே வந்தான். முதல் மாடியில் இருந்து இருண்ட உலகத்தைப் பார்த்து சோம்பல் முறித்தான். சற்று மனம் சாந்தமாக இருந்தது. கரம்சந்த் நினைவுக்கு வந்தான்.

"சித்து, நீ எனக்குத் தம்பி மாதிரி. அதான் இந்த ப்ளான் உன்கிட்ட எடுத்துட்டு வரேன். உன்னை விட எனக்கு நம்பகமான ஆள் வேறு யார் உண்டு?"

"சொல்லுங்க அண்ணே."

"நம்ம ரத்தன் சேட் தெரியுமில்ல. அந்தான் ஃபாமிலியோட குஜராத் போறான். இங்க பிஸினஸ் பிடிக்கலையாம். சொத்து வேற நிறைய இருக்கு. குஜராத் போய் வேற பிஸினஸ் பிடிக்கப் போறானாம். இங்க


## இரா. இராமையா

[அறிமுக எழுத்தாளர்]


**ரூ. 1,000 பெறும் இரண்டாம் பரிசுக் கதை - I**

லோகல்ல அவன் ப்ராஜக்டை நம்மளுக்குக் குடுக்க அவன் ரெடி. முழுசா நானே பாத்துக்கறத்துக்குப் பதில் உன்னையும் சேத்துக்கலாம்னு நினைக்கிறேன். என்ன சொல்ற?"

கரம்சந்த் பெரிய புள்ளி. அவனே பார்ட்னர்ஷிப் அழைப்பது பெரிய கௌரவம் என்று கணக்குப் போட்டான் சித்து.

"என்ன பிஸினஸ்?"

கேரள-தமிழக எல்லையில், பாலக்காடு ரோடில் சூரியன் உதயமாகும் நேரம், நின்று கிழக்கே பார்த்தால், ஐந்து, ஆறாகச் சேர்த்துக் கட்டப்பட்டு, உணவும், நீருமின்றி எலும்புகள் தெரிய இருண்ட, உயிரற்ற கண்களுடன் நடக்கும் துயர மூட்டைகளை அடிமாடுகள் என்பார்கள். நாட்டின் பல பகுதிகளில் இவற்றை லாரிகளில் ஏற்றி கசாப்புக்கு அனுப்புவார்கள்.




"இங்க லோகல்ல மாடு வாங்கி, அங்க கசாப்புக்கு அனுப்பணும். இங்க இருந்து பெங்கால் போகும். நம்ம இடையில. நான் சின்ன வயசுல கொஞ்ச நாள் இந்த வேலை பாத்திருக்கேன். புத்திசாலித்தனம் இருந்தா நிறைய லாபம். ஹரியானால பசு வதை தடுப்பு வேற வரப் போவுது. நல்ல சமயம் இது. இந்த ஹர்யான்வி முட்டாப் பசங்களை ஏமாத்த உன்னோட மதறாஸி மூளையும் என்னோட குஜராத்தி மூளையும் போதும்."

சேட் எல்லாம் ரெடியாக வைத்திருந்ததால் எளிதில் எடுத்துக் கொண்டார்கள்.

அதன் பயன்தான் இந்த வசதி என்று நினைத்தான் சித்து. வாரிசு உருவாகிறது என்றதும் தன்னுடைய சிறு வயது நினைவுகள் மனதுள் சலசலப்பது, தனக்கு மட்டுமா அல்லது எல்லோருக்கும் பொதுவா? சித்து திரும்பி வார்டுக்கு வந்தான்.

எல்லோரும் கொஞ்சம் கவலையாக இருப்பது போல் பட்டது. அவனைக் கவலையோடு பார்க்க, பழைய இடத்தில் வந்து அமர்ந்ததும் மாமா முனங்கத் தொடங்கினார். அந்த நர்ஸ் அவனைத் தாண்டிப் போக, "என்ன ஆச்சு?" அவள் பதில் சொல்லாமல் போனாள். பக்கத்தில் சர்தார்ஜி, "ஏதோ சின்ன பிரச்னை. பயப்பட வேண்டாம்," என்றார். மாமாவின் முனங்கல் சத்தம் அதிகமானது. சித்து தரையைப் பார்த்துக் குனிந்து உட்கார்ந்தான்.

புது பிஸினஸ் பற்றி முதலில் மனைவியிடம் சொன்ன போது, அவன் எதிர்பார்த்ததற்கு மாறாக, அவள் சொன்னாள் : "ஏங்க, வேற தொழிலே அகப்படலியா? ஏன் இதைப் போய்?"

"நீ வேற வியாபாரம் வேண்டாம்னு சொல்லப் போறன்னு பாத்தா..." என்று சிரித்தான். "பிஸினஸ்ல நல்லது கெட்டது கிடையாதும்மா. மத்த மனுஷனுக்கு தொந்தரவில்லாம செய்றதே பெரிசு. அத்தோட, எப்படியும் கசாப்புக்குப் போற மாட்டை நாங்க வாங்கி, விக்கிறோம், அவ்வளவுதான். நாங்களா மாட்டை வெட்டப் போறோம்? சீக்கிரம் நிறைய பணம் பார்க்கலாம்."

"எங்க அப்பாகிட்ட சொல்லிப் பாருங்க."

அவள் ஏன் அப்படிச் சொன்னாள் என்று ரொம்ப நாள் கழித்துத்தான் தெரிந்தது.

அடிமாட்டு வியாபாரத்திற்கு இரண்டு பகுதிகள் உள்ளன. பேரம் பேசி ஏரியாவில் மாடு விற்பவர்களிடம் மாடுகளை மொத்தமாக வாங்குவது. பிறகு பெங்காலில் உள்ள கசாப்பு சென்டருக்கு மாடுகளை ட்ரக்குகளில் ஏற்றி அனுப்புவது. ட்ரான்ஸ்போர்ட் மைதானம் போன முதல் நாள் நினைவு வந்தது. ரத்தன்சேட்டின் பழைய ஆட்கள் மாடுகளை வண்டிகளில் ஏற்றிக் கொண்டிருந்தார்கள். கரம்சந்த் அவர்கள் வேலையைச் சற்று நேரம் உற்றுப் பார்த்தான். பிறகு கத்தினான்.

"ஹலோ, யாருய்யா அது வண்டிய லோட் பண்றது?"

பழைய ஆட்கள் நின்று பார்த்தார்கள். "ஏய்யா, இவ்வளவு இடம் இருக்கு உள்ள. இன்னும் மாடு ஏத்துய்யா. மேல ரெண்டு ட்ரிப் போகணுமா?"

கொஞ்சம் சுமாராக உடுத்தி, சூப்பர்

வைசர் போல் இருந்தவன் முன்னால் வந்தான். "ஸார், லைவ்ஸ்டாக் ட்ரான்ஸ்போர்ட் ஆக்ட்படி, இவ்வளவு மாடுதான் இந்த சைஸ் ட்ரக்கில் ஏத்தலாம்னு..."

கரம்சந்த் அவனை முறைத்தான். பிறகு சித்துவைத் தனியே அழைத்துப் போய், "சித்து, இவங்க சரியில்லை. நான் இவங்க எல்லாரையும் வீட்டுக்கு அனுப்பிட்டு, புது ஆளுங்க அனுப்பி வைக்கறேன்."

மறுநாள் ஆறு பேர் வந்தார்கள். ட்ரக்கில் இருந்த தடுப்புகள், மாடு சாப்பிட உள்ள சட்டிகள் என்று எல்லாவற்றையும் களைந்தார்கள். பிறகு மாடுகளை ஏற்றத் தொடங்கினார்கள். சித்து அவர்களை ஒரு விதமான கவர்ச்சியால் உந்தப்பட்டு கண்கொட்டாமல் பார்க்க, முன்பு முப்பது மாடுகள் இருந்த இடத்தில் எண்பது மாடுகளை அடைத்து, அவை அசையக்கூடா வண்ணம் இருக்க ட்ரக்கின் பின்புறக் கதவை அறைந்து மூடினார்கள். அடைக்க முடியவில்லை. கதவுடன் சற்றுப் போராடிய ஒருவன் கோபத்துடன் கதவைத் திறந்தான். அவர்கள் மத்தியில் தடிப்பாக இருந்தவன் சற்று எக்கி, மிக எளிதாக மாட்டின் முன்காலை முறித்தான். பின்காலையும் முறித்து, வளைத்து உள்ளே தள்ளி, ட்ரக் கதவை மூடி...

சித்து தலையை உலுக்கிக் கொண்டான். ஏன் சம்பந்தமில்லாமல் அது இப்போது நினைவு வருகிறது என்று அலுத்துக் கொண்டான். மாமாவின் முனகல் தாங்க முடியவில்லை. மீண்டும் வெளியே வந்து நின்றான்.

கரம்சந்திடம், "ட்ரான்ஸ்போர்ட் லைடு இன்னும் கொஞ்ச நாள் நான் பாத்துக்கறேன். அதுல நிறைய விஷயம் இருக்கு. தெரிஞ்சுக்கணும்," என்றான்.

"அப்பப்ப ஏதாவது சிக்கலாச்சுன்னா உன்னைக் கூப்பிட்டு விடறேன்."

சிறிது காலத்திலேயே மாடுகளை அடைப்பதில் சித்து திறமைசாலியானான். அவனே அவ்வப்பொழுது வேலையில் இறங்கினான். "இன்னும் ரெண்டு இருக்கே, என்ன பண்றது?" என்ற வேலையாளைக் கெட்ட வார்த்தையால் திட்டி, அவன் உதவியுடன் அவற்றைக் கை, கால்களைக் கட்டி நிற்க இடமின்றி அடைந்த மாடுகளின் மேலே மூட்டை போலத் தூக்கிப் போட்டான். ட்ரக்கின் விளிம்பில் நின்றவாறே உள்ளே திருப்தியுடன் பார்க்கும் போது அது நடந்தது.

பெரிய மாட்டின் பக்கலில் இருந்த சிறியது உடல் மரத்து, எந்தப் பாகமும் அசைக்க இயலாமல், கழுத்தைச் சட்டென்று திருப்ப, அதன் கூரான கொம்பு பெரிய மாட்டின் கண்ணுக்குள் குத்திக் கிழித்து...

தலையை மறுபடி மறுபடி, அப்படியும் இப்படியும் ஆட்டினான் சித்து. இப்போது மனைவியின் பிரசவத்தை விடப் புது பயம் பிடித்துக் கொண்டது. முன்னெப்போதும் இல்லாமல் இந்த நினைவுகள் இப்பொழுது மட்டும் ஏன் இப்படி வந்து அமுழுகின்றன? ஆனால் அவை விடவில்லை. அவன் உத்தரவை எதிர்பார்க்கவில்லை. கலங்கி அடித்துக் கறுப்பு வெள்ளமாகப் பெருக்கெடுத்தன.

லோடிங் முடித்து ஓய்வாக ஒரு நாள் ஆட்களுடன் உட்கார்ந்து டீ குடித்த போது ஒருவன் சொன்னான் : "சார், ஆனா நீங்க பெரிய ஆள். உங்கள மாதிரி யாரும் லோடிங் பண்ணி நான் பார்த்ததில்லை. செம வேலை."

சித்து பெருமையாக சிரித்துக் கொண்டான். "இது ஒரு சவால் மாதிரி இருக்கா. அதான் எனக்கு ஒரு இன்ட்ரஸ்ட்."

மனம் ஏன் குழம்புகிறது என்று வெளியே தெரிந்த டீக்கடைக்குக் கிளம்பும் போது விடை கிடைத்தது. தன் மாமனாரை நினைத்துப் பல்லைக் கடித்தான்.

மனைவி கர்ப்பிணி என்று தெரிந்த முதல் சில உற்சாகமான நாட்களில் ஒருநாள் வீட்டினுள் நுழையும் போது மாமனார் வந்திருப்பதைப் பார்த்தான்.

"வாங்க மாமா! கங்கிராட்ஸ்! நீங்க தாத்தாவாகப் போறீங்க."

"எனக்கு ஏற்கெனவே ரெண்டு பேரப் பிள்ளைங்க இருக்கு சித்து. உனக்கு நான்தான் கங்கிராட்ஸ் சொல்லணும்."

பேச்சு எங்கெங்கோ சென்ற போதும், கடைசியில் மாமா, "உன்னோட பிஸினஸ் அவ்வளவு நல்ல தொழில் இல்லை சித்து."

"ஏன் மாமா, இவ உங்ககிட்ட ஏதாவது சொன்னாளா?"

"அவ எதுவும் சொல்ல வேண்டாம். நான் 'எஸ்.பி.ஸி.ஏ.'ல இருக்கேன். நான் சொல்றதைக் கேளு. உங்க பிஸினஸ் எங்களோட கண்காணிப்புல இருக்கு. ரொம்பக்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 1995 – பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதைகள் :**

1. நாகூர் பயணம் – ப. முருகேசன்
2. இன்னமும் கங்கை – பிருதிவிராஜ் (ச. ரெங்கநாதன்)
3. பரிசு – டாக்டர். அ. விநாயகமூர்த்தி
4. செத்தாரைப் போல திரி – சத்யவிரிராஜன்
5. கருணை மனு – மதுமனோ
6. மறியல் – திருமாமகள் (ஜெயந்தி சுந்தரம்)

7. காத்து கறுப்பு – கௌரி கிருபாநிதி
8. புனர் உத்தாரணம்
   – சுப்ரமணியன் ரவிச்சந்திரன்
9. இரக்கமுள்ள மத்தளங்கள்
   – கே. ஜி. ஸ்ரீதுரை
10. விலை – இ. அன்பரசி
11. ஊரெல்லாம் தீபாவளி
   – புதுவை சந்திரஹரி
12 தெய்வம் துணை – சி. எம். நாராயணன்
13. சாருமதி – பாரதிவிவேக்
14. அடைக்கும்தாழ் – ஜெ. ரமேஷ்பாபு
15. தாய்நிலம் – வாவென்டர் வாவென்ஹுடென் (வி. வெங்கடரமணன்)
16. ஜிம்கார்பட் நேஷனல் பார்க்
   – வெ. இறையன்பு
17. யுத்தம் – ராஜ்கோகுல் (எஸ். ராஜேந்திரன்)
18. மதி தன்னை மிக தெளிவு செய்து... – துரை. சரவணன் (அறிமுக எழுத்தாளர்)
19. மனம் ஒரு மாயா லோகம் – சிம்ப்ருக் சின்னது (அகிலா கிருஷ்ணன்)
20. இருவேருலகம் இதுவென்றால்
   – எம்.ஏ. சுசிலா.

கொடுமை அது. வேற எதாவது பண்ணேன்?"

லேசாகக் கிளர்ந்தெழுந்த கோபத்துடன் சித்து அவரைப் பார்த்தான். "சட்டப்படி நாங்க மாடு ட்ரான்ஸ்போர்ட் பண்றதுல தப்பு எதுவும் இல்லை."

"யார் சொன்னது? நீங்க மாடுகளக் கொடுமையா நடத்தறீங்க. ட்ரக்ல மாட்டுக்குச் சாப்பாடு வைக்கிறீங்களா?"

சிறது நேர வாக்குவாதத்திற்குப் பிறகு, அவர், "சித்து, உங்க ட்ரக் நம்பரை நான் போலீசுக்கு போன் போட்டுச் சொன்னா போதும். பிடிச்சு வச்சுடுவாங்க, தெரியுமா?"

"சும்மா மிரட்டாதீங்க. நாங்க மட்டும் தான் இதச் செய்யுறோமா, என்ன. உங்களால ஆனதைப் பாருங்க."

பஞ்சாபகேசன் எழுந்து போகும் போது, "உனக்கு முன்னாடி இங்க இருந்த ரத்தன் சேட் ஏன் வித்துட்டுப் போனான்னு தெரியுமா? பசுவைத் துன்புறுத்தினா பாவம்; வம்சத்தையே அழிச்சுடும்," என்றார். மனைவியைக் கடைக்கண்ணால் பார்த்த சித்து, அவளது வெளுப்பான முகம் இன்னும் வெளிறுவதைக் கவனித்தான்.

சூடான ட உள்ளே இறங்கினால் மனசு லேசாகும் என்று எதிர்பார்த்துக் கடையில் உட்கார்ந்த பொழுது, மனப் பாறையின் உள்ளே, ஒரு கரிய பிளவில் இருந்து வெளிப்பட்டு நீந்தி மேலே வந்த வண்ணம், வேண்டாம், வேண்டாம் என்று அமுக்க, மேலே எதிர்கொண்டு எழும்பி அவன் கண்முன்னே மிதந்து வந்து நிலை பெற்றது.

கைகால் பதற திரும்பி மருத்துவமனைக்குள் வந்தான் சித்து. மாமியின் கண்களில் நீர். 'ஈசுவரா' என்று புலம்பிக் கொண்டிருந்தாள். மாமா அவனைப் பார்த்து முனங்கவில்லை. அவர் முகம் இருண்டிருந்தது. விபரீதமாக அறைக்குள் இருந்து கிளம்பிய சப்தம் சகிக்காமல் அருகில் இருந்த தூண் மேல் சாய்ந்து, கண் மூடி... யாரை வேண்டுவது, என்னவென்று வேண்டுவது?

வீட்டுக்குக் கிளம்புமுன் கடைசி லோடுக்கு வேண்டியது எல்லாம் செய்துவிட்டுப் பார்வையிடும் போது, ஒருவன், சற்றுப் புதியவன், அழைத்தான்.

"ஸாப், கதவு மூடவில்லை."

"காலை ஒடிப்பதுதானே, முட்டாள்!"

"இல்லை ஸாப், அந்த மாடு..."

சித்து அருகில் போய் பார்த்த மாடு சினைப் பசு. "எந்த மடையன் இதைப் போய் வித்தது..." என்று முனங்கிய சித்து, "என்ன இருந்தாலும் சாகத்தானே போகுது. காலை ஒடி." என்றான். தயங்கியவாறே டிரக்கின் உள்ளே ஏறியவனை யோசனையுடன் பார்த்துப் பிறகு, "இரு. நீ இறங்கு," என்று திரும்பி நடந்து மேலே ஏறி வேலையை முடித்துத் திரும்பி நடந்து மைதான எல்லைக்கு வரும் போது, மனைவி நிற்பதைப் பார்த்தான்.

நர்ஸ் ஒருத்தி ஓடும் சப்தத்தால் திடுக்கிட்டு விழித்துப் பார்த்த போது கண்கள் பனித்திருப்பதை உணர்ந்தான். மீண்டும் தூங்கிப் போக...

கை, கால்கள் வளைந்து இருந்தன அவன் குழந்தைக்கு. வில் போன்று வளைந்த கால்களைப் பார்த்து விட்டு மேலே, முகத்தைப் பார்க்க மாட்டேன் என்று அடம்பிடித்து, யாரோ தலையைப் பின்னால் இருந்து அழுத்த, குழந்தையின் முகத்தைப் பார்த்துக் குனிந்து, அதன் கண்ணைப் பார்த்து, ஐயோ! அந்தக் கண்...

"சித்து! சித்து!"

யாரோ எழுப்புவது உணர்ந்து, கனவு என்று தெளிந்து கண் திறந்தால் மாமா! "வா, உன் பெண்ணை வந்து பாரு," என்று இழுத்தார். வார்த்தை விபரீதமாய் அர்த்தம் செய்து கொண்டு முன்னே சென்று பயத்துடன் அவள் படுக்கையருகே போய்ப் பார்த்தான். பக்கத்தில் அலறி அழும் குழந்தையுடன் அவனைப் பார்த்துச் சிரித்தாள், அவன் அருமைப் பெண்டாட்டி.

# ஒரு தாத்தா-பாட்டியின் இமாலய சாதனை!



• மலையேற்றத்துக்குத் தயாராகும் குழு...



• பனி உருகி யமுனை நதியாக வருகிறது....

அறுபத்தேழு வயதான நீல கண்டனும் ஐம்பத்தேழு வயதான திருமதி பானுமதி நீலகண்டனும் ஆச்சரியப்படத்தக்க சாதனை யொன்றைச் செய்திருக்கிறார்கள். அதுதான் மலையேற்றச் சாதனை!

• கேதார்நாத் கோயில்...



பத்தாயிரம் அடியிலிருந்து பன்னிரண்டாயிரம் அடி உயரம் வரையுள்ள கங்கோத்ரி, யமுனோத்ரி, பத்ரிநாத், கேதார்நாத் ஆகிய இடங்களுக்குச் சென்று வந்திருக்கிறார்கள். இவர்களின் உற்சாகத்தைப் பார்த்துத்தான் 35 வயது முதற்கொண்டுள்ள மற்ற சில இளைய ஜோடிகளும் சேர்ந்து கொண்டனவாம்!

இத்தனைக்கும் நீலகண்டன் ஒரு முறை ஹார்ட் அட்டாக்கால்



• அலகானந்தாவும் பாகீரதியும் சங்கமமாகி கங்கையாகிறது...



• யமுனோத்ரியில் வெந்நீர்க் குளியல்



• கங்கோத்ரி கோயில்

பாதிக்கப்பட்டவர். திருமதி பானுமதிக்கோ ஆர்திரைடிஸ் பிரச்னை போதாதென்று நீரிழிவு உபாதையும் சேர்ந்த நிலை.

இப்படியோர் சூழ் நிலையில் இவர்களுக்கு எப்படி இந்த ஆசை வந்தது? "எவரெஸ்ட் சிகரத்தை எட்டிப் பிடித்த முதல் இந்தியப் பெண்மணியான பச்சேந்திரிபால் தான் காரணம்!'' என்று விளக்குகிறார் பானுமதி.

''ஜாம்ஷெட்பூரில் உள்ள டிஸ்கோ (டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி) யில் என் கணவர் பணியாற்றி அண்மையில் தான் ஓய்வு பெற்றுச் சென்னை வந்தோம். அங்கு இமாலயச் சாதனை புரிந்து விட்டு பச்சேந்திரிபால் வந்த போது எங்கள் மகளிர் சங்கப் பாராட்டு விழாவில் அவரைச் சந்தித்தேன். அவரது அனுபவங்களைக் கேட்டேன். அப்போதே எனக்கு மலையேற்ற அனுபவத்தின் மேல் ஆசை வந்து விட்டது. அதன் விளைவுதான் கடந்த மே மாதம் நாங்கள் சென்று வந்த 'ட்ரெக்கிங்'!" என்று ஆரம்பித்தார்.

● மலையேறப் புறப்படுவதற்கு முன்பே தினமும் ஆறு கிலோ மீட்டர் தூரம் நடந்து பயிற்சி செய்யச் சொன்னார்கள். என்னால் வீட்டு வேலை காரணமாக அவரோடு போக முடியாது. என்றாலும் வேலைகளை முடித்து விட்டு தினமும் ஆட்டோ பிடித்து மெரினாவிலுள்ள காந்தி சிலைக்குப் போய் விடுவேன். அங்கிருந்து அண்ணா சதுக்கம் வரை நடந்து மீண்டும் காந்தி சிலைக்குத் திரும்புவேன். பிறகு ஆட்டோ பிடித்து வீடு!

● டாடா நிறுவனத்தின் 'அட்வென்ஞ்சர் ஸ்போர்ட்ஸ் பவுண்டேஷனின்' (மலையேற்றத்துக்குப் பயிற்றுவிக்கும் அமைப்புப் பிராந்திய மானேஜரான பச்சேந்திரிபால் உ.பி. மாநிலத்தில் உத்தரகாசி பகுதியில் இருக்கும் 'ரவாடா' என்ற இடத்தில் அமைந்திருக்கும் பேஸ் கேம்ப் (base camp) பில் எங்களை வரவேற்றார்.

● அங்கும் அரை நாள் மலையேற்றப் பயிற்சி. சரிவுப் பாதை, கற்பாறைகள். பாலன்ஸ் தவறினால், கீழே விழுந்து விடக் கூடிய குறுகிய மரப்பாலம். வேகமாய் ஓடும் சிற்றோடைகள். சறுக்கி விடும் காய்ந்த பைன் மர இலைகள்... இப்படி பலவித இடர்ப்பாடுகளைக் கொண்ட மலைப் பாதையில்தான் எங்களுக்குப் பயிற்சி. இவை போதாதென்று நூறு அடிக்கு நேர் சரிவாக அமைந்த பாறையில் இடுப்பில் கயிற்றைக் கட்டிக் கொண்டு, ஒரு கயிற்றைப் பிடித்த படி கீழே இறங்கும் பயிற்சி. முதலில் அனைவரும் தயங்கினாலும், நானும், என் கணவரும் கயிற்றை எடுத்து இடுப்பில் கட்டிக் கொள்ளத் தொடங்கியவுடன், அனைவருக்குமே ஒரு தைரியம் வந்து விட்டது.

● மலையேறும் போது அனாவசியமாய் பேசக் கூடாது என்பது கட்டாயமான விதி. பேச்சு கவனத்தைச் சிதற அடிக்கும். சீக்கிரமே களைப்படையச் செய்யும். நடக்கும் போது அடிமேல் அடி வைத்து கவனமாய் நடக்க வேண்டும். சற்று கவனம் பிசகினாலும் கூட, விழுந்து அடிபட்டுக் கொள்ள வேண்டியதுதான். அரைமணி நடந்தால் சில நிமிடங்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளலாம்.

● எங்களுடைய பொருட்களை எடுத்துச் செல்ல, ஒரு பெரிய பை தந்தார்கள். அதில் சீப்பு முதல் செருப்பு வரை அனைத்தும் வைத்துக் கொள்ள வசதி உண்டு. அதை விரித்தால் படுக்கையாகி விடும். படுத்துக் கொண்டு, கால் முதல் கழுத்து வரை 'ஜிப்'பை இழுத்து போர்த்திக் கொண்டு, தலைக்குக் குல்லாய் அணிந்து குளிரிலிருந்து தப்பிக்கலாம்.

● உத்தரகாசி பகுதியில் இரண்டாண்டுகளுக்கு முன் ஏற்பட்ட பூகம்பத்தின் பாதிப்பை இப்போதும் காண முடிகிறது. மலைகளிலும், பாறைகளிலும் பெரும் பிளவுகள். ஆறுகள் இப்போது திசைமாறி ஓடுகின்றன. புனருத்தாரணப் பணிகள் ஆமை வேகத்தில் நடந்து கொண்டிருக்கின்றன.

● தினமும் காலை நாலு மணிக்கு விசில் ஒலி கேட்கும். எல்லோரும் எழுந்து விட வேண்டும். உடனே கடச்கட டீ. ஆற்று நீரில் குளியல். மலைப்பகுதியில் காலைக் கடன்கள். பிரெட், சப்பாத்தி என ஏதாவது சிற்றுண்டி. ஐந்து மணிக்கெல்லாம் முதுகில் பையைக் கட்டிக் கொண்டு, புறப்பட்டு விட வேண்டியதுதான்.

● களைப்படைந்தபோதெல்லாம் பச்சேந்திரிபால், "கலப்படமில்லாத காற்றும், தண்ணீரும், இயற்கையும் உங்களுக்கு புதுத் தெம்பைத் தரும்" என்று அடிக்கடி சொல்லுவார். அது உண்மையும் கூட. சலசலத்து ஓடும் ஆறு, நீர்வீழ்ச்சி, பனிக்கு நீர் கொண்ட ஏரி.. இவற்றைப் பார்த்து விட்டால் போதும், எல்லோரும் நின்று விடுவோம். ஜில்லென்ற தண்ணீரில் முகம் கழுவி, தண்ணீரைப் பருகினால், களைப்பு மறைந்து, புத்துணர்ச்சி

**யா**னை குழியில் விழுந்தால் தவளை கூடப் பின்னாலிருந்து ஓர் உதை கொடுக்கும்.

- வங்காளப் பழமொழி
- பா. குணா



பிறப்பதை சந்தோஷமாய் அனுபவித்தோம்.

● ஒரு மலை கிராமத்தில் குழந்தைகள் பள்ளிக்கூடம் இருந்தது. அந்தக் குழந்தைகளிடம் மலை நாட்டுப் பாடல்களைப் பாடி, ஆடச் சொன்னோம். குழந்தைகள் கம்மா நின்றனர். ஒருவர், "இதுங்களுக்கெல்லாம் முக்காப்பலா தான் தெரியுமாம்" என்று கிண்டல் செய்தார். அது நிஜம்தான். அவர்களுக்கு முக்காப்பலா பாட்டு தெரிந்திருந்தது.

● பந்தர் பூஞ்ச் (குரங்குவால் என்று பொருள்) சிகரம், கறுப்பு சிகரம் என்ற பனி படர்ந்த சிகரங்களுக்குச் சென்ற போது நல்ல வெயில். மிகத் தெளிவாய் சிகரங்களைப் பார்க்க முடிந்தது. அங்கு அல்ட்ரா வயலட் கதிர்கள் தாக்கும் அபாயம் உண்டு என்பதால், கறுப்புக் கண்ணாடி அணிவது கட்டாயம். எங்களுடன் அந்த சிகரங்கள் நிறைய போட்டோக்கள் எடுத்துக் கொண்டன.

● மலையேறும் போது, வழியில் மலை ஆடுகளைக் கண்டால் எச்சரிக்கை தேவை. அவை நடக்கும் போதும், தாவும் போதும் கால் இடறிக் கற்கள் விழும். அந்தக் கற்கள் மிகுந்த வேகத்துடன் கீழே வரும் போது, நம் மீது பட்டால், எலும்பு முறிவு ஏற்படும். அல்லது நாம் தடுக்கிக் கீழே விழுந்து விடக் கூடிய அபாயமும் உண்டு.

● பாகீரதி என்ற பெயரில்தான் கங்கை உற்பத்தியாகிறாள். கங்கோத்திரி என்ற கங்கையின் உற்பத்தி ஸ்தலத்திற்கு இந்தியாவின் மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம் யாத்திரிகர்கள் வருகிறார்கள். விளைவு : அசுத்தமும், துர்நாற்றமும் தாங்க முடியவில்லை.

● அனுமான் சண்டி என்ற இடத்திலிருந்து பதினாலு கிலோ மீட்டர் மேலே போனால் யமுனை நதி உற்பத்தியாகும் யமுனோத்திரி. ஊருக்கு ஐந்து கி.மீ. வெளியிலேயே பஸ்ஸை நிறுத்தி விட்டு, அங்கிருந்தே நடக்க வேண்டிய அளவுக்கு டிராபிக் ஜாம். நடந்து போக முடியாதவர்களுக்கு மட்டக் குதிரை சவாரி கிடைக்கும். இல்லையெனில் டோலியிலோ, கூடையிலோ உட்கார வைத்து, முதுகிலே கட்டிக் கொண்டு மேலே கொண்டு போய் விட ஆட்கள் உண்டு. சில இடங்களில் நம்மைச் சுமந்து கொண்டு, மேலே ஏற மட்டக் குதிரைகளே திணறும் அளவுக்கு ஏற்றம். இறங்கி நடந்தேயாக வேண்டும்.

● யமுனோத்திரியில், ஒரு கோவிலையொட்டி கந்தக நீரூற்று. ஒருபுறம் குளிர்ந்த யமுனை நதிநீர். மறுபுறம் கடகட ஊற்றில் வெந்நீர். சர்வரோக நிவாரணியாம் ஊற்று நீர். குளிக்க வசதியாய் நிறைய தொட்டிகள்.

● பத்ரிநாத், கேதார்நாத் ஆகிய இடங்களில் ஆயிரக்கணக்கில் யாத்ரீகர்கள் வந்தாலும், அவர்களுக்குப் போதிய வசதிகள் செய்து தருவதில் உ.பி. மாநில அரசின் சுற்றுலாத் துறையின் மெத்தனப்போக்கை காண முடிகிறது. பயணிகளின் தகவல் விசாரணைக்கு பொறுப்பாய் பதில் சொல்ல வசதி இல்லை. பஸ்களைத் தேடிக் கண்டுபிடிக்க பகிரதப் பிரயத்தனம். பவர்கட், லோவோல்டேஜ் பிரச்னைகள் வேறு.

● யமுனோத்திரி, கங்கோத்திரி, பத்ரிநாத், கேதார்நாத் ஆகியவை இமயமலையில் ஏறத்தாழ ஒரே மட்டத்தில் இருந்தாலும், ஒன்றிலிருந்து ஒன்றுக்கு நேரடியாய் போக முடியாது. கீழே ஒரு குறிப்பிட்ட இடம் வரை இறங்கி வந்து, மறுபடி மலையேறிப் போக வேண்டும்.

● எங்கள் பயணத்தில், பத்ரிநாத், கேதார்நாத் இரண்டுக்கும் பச்சேந்திரிபால் எங்களுடன் கூட வரவில்லை. காரணம் : பக்தி என்ற பெயரில் மக்கள் இயற்கையைப் பாழ்படுத்துவதை, பச்சேந்திரியால் சகித்துக் கொள்ள முடியாதாம்.

● இந்தப் பயணம் எங்களுக்கு இரண்டு விஷயங்களை உணர்த்தியது. ஒன்று : பிரமாண்டமான இமயம், ஆர்ப்பரிக்கும் கங்கை, யமுனை இவற்றைப் பார்க்கும் போது, இயற்கையின் முன்னால் நாம் சின்னஞ்சிறு துரும்பு. இரண்டாவது : வெண்பனியைச் சூரியன் உருக்கி, ஆறுகளாக்கி அனுப்புகிறது. ஆயிரக்கணக்கான மைல்கள் கடந்து அவை நம்மை வந்தடையும் போது, அந்தத் தண்ணீர் என்னுடையது, உன்னுடையது என்று சண்டை போட்டுக் கொண்டிருக்கிறோம்; இது என்ன நியாயம்?

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

# மனிதன் விழுங்கும் பூமி?

நாடெங்கும்
வெட்டப்பட்டு
சாய்ந்து கிடக்கின்றன
மரங்களின் பிணங்கள்.

இயற்கையின்
மயான பூமியின் மேல்
கொலுவீற்றிருக்கிறது
கான்கிரீட் நாகரிகம்

பெட்ரோல் கலாசாரம்
துப்பிய புகை
நுரையீரல்களை அடைக்க,
சுவாசிக்கத் திணறுகின்றன
உயிர்கள்.

நுனிக்கிளை அமர்ந்து
அடிக்கிளை செதுக்கும்
மூடரிடம்
சிக்கி அழிகின்றன
இனி வரும் நாட்கள்.

இந்த நாகரிகத்தின்
கழிவுகளைச் சுமந்து
கருப்பாகிக் கொண்டிருக்கிறது
நீலத் திரைக்கடல்.
அதன்
அலைகளின் உச்சியில்
மகுட நுரைகளுக்குப் பதிலாக
அவலமாய் மிதக்கின்றன
மீன்களின் சவங்கள்.

பாம்பு விழுங்கிய நிலா
துப்பப்படலாம்
கரிய வானில் மீண்டும்.
ஆனால்
மனிதன் விழுங்கும் பூமி...?

கரையான் அரித்த
கட்டடமாய்
புவிக்கோளம்
உளுத்துப் போய் உதிரும்முன்
விழித்தெழுவோம்.

அருளமுது.


பாதன் அச்சகத்தில் அச்சிடுபவர் [illegible]
வி. வைத்தியநாதன். ஆசிரியர் : [illegible]
முகவரி : 47, [illegible]
அலுவலகம் : 2345624, [illegible]
ஆண்டுச் சந்தா [illegible]
ஆறு மாதச் சந்தா [illegible]



அபிராமியின்

# மயோபுரா ஹோலி ரிசார்ட்ஸ் பி லிமிடெட்

**"A UNIT OF ABBIRAMI GROUP COMPANIES"**

Enroll Today

Enjoy Tomorrow onwards




**OPERATIONAL RESORTS AT PRESENT TIRUPATHI & VELANGANNI**
**SHORTLY AT 55 MORE PLACES**

**II.** ★ முதலீடு ரூ. 5000/– மட்டுமே
★ ரூ. 5000/– 10வது வருடம் திரும்ப பெறுவீர்.
★ 1 நாள் இலவசமாக தங்கலாம்
★ இலவச பிக்அப் / டிராப்
★ ரூ. 10,000/– இலவச விபத்து காப்பீடு
★ போனஸ் ரூ. 75,000/– பெறுவீர்
★ VIP ALFA சூட்கேஸ் இலவசம்

**III.** ★ ரூ. 25,000/– மட்டும் 5 வருடங்களுக்கு வைப்பு நிதி திட்டத்தில் செலுத்தி,
★ ஆறு மாதங்களுக்கு ஒரு முறை ரூ. 3000/– பெறுவீர்
★ 3 நாட்கள் இலவசமாக தங்கலாம்.
★ இலவச பிக்அப் / டிராப்.
★ ரூ. 20,000/– இலவச விபத்து காப்பீடு
★ ரூ. 1.5 லட்சம் போனஸ் பெறுவீர்.
★ 100gm வெள்ளி குத்து விளக்கு பரிசு.

பதிவு அலுவலகம்: **B-18,** சித்ரா காம்ப்ளக்ஸ், சத்திரம் பஸ்ஸ்டாண்ட், திருச்சி - 2. ✆ 31467

கிளைகள் : ● 49/21, முருகன் காம்ப்ளக்ஸ், பிருந்தாவன் தெரு, மேற்கு மாம்பலம், **சென்னை – 33.** ✆ 4840258 ● 55/B, சின்னையா காம்ப்ளக்ஸ், ஐந்து ரோடு, கௌரி தியேட்டர் எதிரில், **சேலம் – 4.** ✆ 445037. ● D-6, K.L.R. பில்டிங், 207, சாஸ்திரி ரோடு, ராம் நகர், **கோயம்புத்தூர் – 9.** ✆ 230345,PP. ● 545, அருணா காம்ப்ளக்ஸ், இரண்டாவது தளம், சுவின் மருத்துவமனை எதிரில், பெருந்துறை ரோடு, **ஈரோடு-11.** ✆ 74781. ● ரெஸிடென்ஸியல் மேனேஜர் : திரு K.R. ராமமூர்த்தி, 34 மெயின் தெரு, நாமக்கல் – 1. ✆ 22310

